வையே பார்வையாய் அதிலீடுபட்டுப் பிரபஞ்ச லக்ஷியமிழந்து கூத்தாடுவான். ஞானியும் அப்படியே விளையாடுவோன். இவனுக்கு இந்திரியங்கள் சொன்னபடி கேட்கும்: அவனுக்கு சொன்னபடி கேட்காது. பேயன் விஷயப்பற்றே பற்றுப் வேறுபற்றுதலின்றி யாடியலைவான். ஞானியும் "பவோபவம்" என்கிற அந்தர்லக்ஷியம் ஒன்றிலன்றி வேறு பற்றுதலின்றி ஜகத்தோடு ஜகமாய்த் தோற்றமாத்திரத்தால் ஆடியலைந்து நிஷ்காம்ய கர்மஞ்செய்துகொண்டு திரியாமல்திரிவான். பாலன் (குழந்தை) சுபாவம் நிச்சிந்தையாயிருத்தலாம். ஞானியும் மனமிறக்கப்பெற்று நிர்விகல்பனாயிருப்பன். உன்மத்தன் பித்தவெறி மத்தித்து மதோன்மத்தனாய்த் திரிவன். திரிகுணாதீதனான ஆரூடனும் திரிகுணாத்மகமான மதயானையையடக்கியாளும் அங்குசம் கையேந்தினவனாய் மனோன்மத்தனாய் விளங்குவான். "ஆனைமும்மதங்கொண்டால் யாரே யடக்கலாகும்!" என்பது திருமந்திரோபதேசம்.

இப்படியாக அறிவைப்பரவச்செய்ய வேண்டுமென்கிற பித்துப் பிடித்து அதுவே சிந்தையாய்த் திரிந்தபொழுது பத்திரிகை நடத்தும் தொழிலில்மர்ந்து ஸப்த ஸம்வத்ஸரம் (ஏழு வருஷம்) ஆய்விட்டது. இந்த ஸப்த ஸம்வத்ஸரமும் எனக்கு ஸப்தஸ்தான உற்சவமாயிருந்தது. ஸப்தஸ்தான உற்சவமென்பது பஞ்சநத க்ஷேத்திரமாகிய திருவாதியில் இன்றைக்கும் விமரிசையாக நடந்து வருகிறது. ஸப்தஸ்தான உற்சவத்தின் உண்மையை ஸப்தாக்ஷரங்களினால் சொல்லலாம். "டரலகஸஹய: ஓம்" இதில் "ஓம்" சிவம்; "டரலகஸஹய:" சக்தி; இவையிரண்டின் அபேத ஐக்கிய ஸ்வரூபமான திருமணக்கோல ஊர்வலமே ஸப்தஸ்தானமஹோற்சவமாம். ஏழு அக்ஷரங்களையும் ஸப்த லோகங்களாக பாவிப்பார். ஏழு லோகங்களும் ஷடாதாரங்களும் அவற்றின் சமஷ்டியுமாம். இவையேழுமே முக்கிய க்ஷேத்திரங்களாம். ஸ்தல விசேஷ மஹிமையால் இவைகள்தானே ஸப்த ஸ்தலங்களும் (திவ்ய க்ஷேத்திரங்கள்) ஆம். இப்படியாக நான் முதலில் பட்ட ஏழு வருஷங்களின் பாட்டை நினைத்துக்கொண்டு பார்த்தால் பின்னர் யோகாப்பியாஸகாலத்தில் ஷடாதாரங்களையும் கடந்து ஏழாவது ஸ்தானமாம் அவைகளின் சமஷ்டி ஸ்தலத்தில் போய்ச்சேர்ந்த "யோகயாத்திரை" யென்று சொல்லும் "காசி யாத்திரைக்குச்" சரியொத்ததாகத் தோன்றுகிறது. முதல் ஏழு வருஷம் சுதேசமித்திரனாகவேயிருந்துழைத்து ஜீவனம் நடத்தினது தான் "ஜீவயாத்திரை". உலகத்தாரெல்லாரும் 70-வயது இருக்க வரன் பெற்று நடத்தும் ஜீவயாத்திரை எனக்கு 7 வருஷத்தில் முடிந்தது. பிறகு அறிவைப் பரவச்செய்ய வேண்டுமென்கிற பித்துப் பிடித்து ஊரிலுள்ள பெரிய மனுஷர்களையெல்லாம் பார்த்து அவர்களுடைய "தரிசனம், அனுக்ரகம்" என்கிற பரிச்சயமும் அனுகூலமும் பெற்றதே "ஸ்தலயாத்திரை" யென்று சொல்லும் "காசியாத்திரை." இப்படியாக ஜீவயாத்திரை புறப்பட்டது 1885-ல்; பிறகு காசி யாத்திரை யென்று சொன்ன ஸ்தலயாத்திரை செய்ய ஏற்பட்டது 1892-ம் வருஷத்தில். அப்பொழுது தான் அ. ப. ஏஜன்ஸியும் விவேக சிந்தாமணியும் ஆடம்பரமாயேற்பட்டு வெளிவரலாயிற்று. பிறகு 7-வருஷங்கள்செல்ல, காசி யாத்திரை முடிந்து, 1899-ல் சிவயோகயாத்திரைக்கு வேண்டிய ஆஸ்பதங்கள் நேரிட்டன. இதுதான் காசியில் கங்காஸ்நானம் செய்தபின் நடக்கும் இராமேசுவரயாத்திரை. அப்புறம் 7-வருஷங்களானபின் 1906-ல் "சிவயோகயாத்திரை" முடிந்து, பிறகு 'கேவல யாத்திரை' யென்று சொல்லும் "கைவல்லியப்பித்துப்" பிடிக்கலாயிற்று. இதையே ஞேயப்ரஹ்மாகாரமென்றும் நிர்வாணயாத்திரையென்றும் அவதூதாத்மாவென்றும் சொல்வார்கள். இந்தக்கைவ

ல்ய யாத்திரை 1913-ம் வருஷம் மார்ச்சுமாசத்தோடு முடிவுபெறுவதாகும். அதுவரையிலிருப்பது முழைப்பதும் என்ன நிச்சயமென்றால், எப்படி யென்று சொல்கிறேன் கேளுங்கள்:—

ஒரு வண்டிக்காரனிடத்தில் சத்தம் பேசி முடிந்தாலும் சமயத்துக்கு வண்டி வருமென்பது நிச்சயமில்லை. ஆனால் அதே வண்டிக்காரன் சத்தம் பேசியபின் அச்சாரமும் வாங்கிவிட்டானானால் காலந்தப்பாமல் வண்டி சவாரிக்குக் கொண்டுவருவானென்பது நிச்சயமல்லவா? இகலோக வாழ்வே யாத்திரை. தேஹமே வண்டி; செல்வமே சகடக்கால் (வண்டிப்புருளை); சங்கல்பமே அச்சாணி; வஸ்து நிச்சயமே அச்சு. உசுவாஸ நிசுவாஸமே வண்டி யிழுக்கும் ஜோடி மாடு அல்லது குதிரைகள்; ஜீவாத்மகனே (சிதாபாஸன்) வண்டிக்காரன்; சுத்தாத்மகனும் தேசிகாச்சாரியனே (குருவே) சவாரி புருஷன். விவேகசிந்தாமணியே யாத்திரையின் பெறற்பேறு (பலன்). இப்படியாக ஸர்வகாரண பூதாசக்தியானகுரு, வாதவூரண்ணலுக்கு குருந்தமரத்தடியில் குருமூர்த்தங் கொண்டு குருமணியாகத் தோன்றியவாறே போல், இங்கிலவுலகில் நியாயபரீபாலனம் (தர்ம்மஸ்தாபனம்) செய்யும் தேசிக மணியாகத்தோன்றி "அப்பா, விவேகசிந்தாமணி 19,20-வது வாலியங்களுக்கு அதாவது 1913-ம் வருஷம் மார்ச்சு மாசம் முடிகிற வரையில், தளமான காகிதப் பதிப்புக்குரிய என் சந்தா தொகையை இதோ கொடுக்கிறேன், வாங்கிக்கொண்டு எனக்கு ஒரு வரியனுப்புக உனது பத்திரிகை (பத்திரிகாதர்மம்) நிர்விக்னமாக நடப்பதாக" என்று ஆசிர்வதித்தால், அதை யேற்றுக்கொண்டு அச்சாரம்வாங்கினபின் சந்தேகமேன்!

இப்படியாக நாலுயாத்திரையில் மூன்று முற்றும் நடந்துவிட்டது, நாலாவதில் பாக்கி யிருக்கும் இரண்டுவருஷங்களுக்கும் 'வி-சி-தேசிகன்' ஆசிகூறி அச்சாரமும் கொடுத்துவிட்டான். அச்சாரம் கொடுத்த தொகையும் தசமஸ்தான எண்ணுயிருப்பதாலே, "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்கிற ஔவையார் சொல்லிய மஹாவாக்கியத்தைக் கொண்டு, "ஷட்விமஜகபாவம்" அதாவது "26" என்கிற தோற்றமாம் எண்ணை ஸ்மரித்து இப் பிரபஞ்சநாடகமெல்லாம் இந்த 26-ம் வருஷத்தில் ஆடி முடிக்க வேண்டு மென்பது ஈசுவர சங்கல்பம் என்று விளங்குகிறது. இது சாதரணவருஷம் பங்குனியீ கடைசிநாள் அன்று பிறந்த அசரீரிவாக்கின் அந்தர்க்கதஜோதியிலிருந்துண்டான குப்த வித்யா விசித்திர வைபவம். நான் பத்திரிகைக்கெழுதப் பேனாக் கைப்பிடித்தும் 26-வருஷங்களாய்விட்டன. பஞ்சவிம்சதியென்றால் 25. சென்ற 25-வருஷங்களாக ஹருக்குழைந்ததால் வந்த பாக்கியத்தை யெல்லாம் திரட்டிச் சுருக்கி ஒரு எண்ணில் சொல்லவேண்டுமானால் "26" என்கிற "ஷட்விமஜகபாவம்" என்று சொல்வேன்.

1885-லிருந்து முதலேழு வருஷமான (ஜீவன முயற்சி) லோகயாத்திரை செய்தகாலம்; ஸப்தஸ்தானம் என்பது திருக்கலியணமான வுடன் நடக்கும் ஊர்வலத்திருக்கோலம். லோகத்தின் சுபாவமறிந்தால் அந்த யாத்திரை முடிந்தது. சுதேசமித்திரன் பத்திராதிபரை அன்று கண்ட கண்ணால் இன்றும் அகக்கண் விளங்கக்கண்டேன். 26-வருஷகாலத்தில் அவர் குட்டும் வெளியாயிற்று. இதுதான் ஜாக்ராவஸ்தை.

1892-லிருந்து ஏழுவருஷம் காசியாத்திரை, அல்லது ஸ்தலயாத்திரை; அன்றைக்கு ஹைகோர்ட்டு ஜட்ஜாயிருந்து அபயங்கொடுத்த கண்ணை அதே ஸ்தானத்தில் இன்றைக்குங் கண்டேன். ஸ்வப்னவஸ்தையில் கந்தர்வ நகரம் கண்டதுபோல் அவன் குட்டும் வெளியாயிற்று.

1899–1900-ல் "கழுக்குன்றிலே வந்தேவியழைத்தென்குறையோறுது" ஓதியசத்குரு மணியாம் தேசிக மூர்த்தியை, அன்றைக்கு

திருக்கழுக்குன்றேறுகையிலுண்டான அநாஹத சப்தத்தின் த்வனியின் அந்தர்க்கத ஜோதியில் கண்டுகளித்துத் திடங்கொண்டது போல், சுஷுப்தியவஸ்தையென்று சொல்லும் பிரஞ்ஞானகனமான இகசுகநிலையிலிருந்து இன்றைக்கும் "கூவியழைத்துக் குறையிறந்திரு" வெனச் சொல்லக்கேட்டு அவன் சூக்ஷ்மாதி சூக்ஷ்மமாம் 25-ம் தத்துவமென்கிற பஞ்சவிம்சதி பாக்கியத்தைப் பெற்றுக் களித்தேன். களித்த பின் உள்ளதைச் சொன்னேன். துரிய வடிவாம் அருவ சிவத்தின் சகஜவடிவை விரோதிகிருது வருஷத்தின் பங்குனி உத்தர நாளில் காணமற்கண்டு அடுத்தவருஷ முடிவில் அபரோக்ஷ சாக்ஷாத்காரமாப் கலந்தனுபவிப்பேன்.

இதுவரையிற்கண்ட மூவகைத் தரிசனமும் திரிகாண சுத்தியாய் திரியலர்தீர்ந்த ஞானக் கண்ணால் ஸ்தூல சூக்ஷ்மகாரண மென்கிற சரீரத் திரயங்களிலுங் கண்டேன். கண்டதைக் கண்டபடி விண்டேன். 'பிதகோராஸ்' என்பவர் கணிதங்களைக் கொண்டே தத்துவம் பேசுகிறதீர்; சென்ற சஞ்சிகையில் அவர் பிரபஞ்ச தர்மமெல்லாம் எண்ணளவே (சங்கியை மாத்திரமே) என்றும், எல்லா வுயிர்களும் எண்ணிக்கைக் கணக்காயிருக்கிற தென்றும் சொன்னதை யிங்கிலீஷில் குறிப்பிட்டு விட்டு அதன் உட்கருத்தை "எண்ணுமெழுத்தும் கண்ணனத் தகும்" என்னும் வரகவி வாக்கால் விளக்கிக் காட்டினேன். அஃதையே இம்முறை எம் வாழ்நாள் அனுபவத்தைக் கொண்டு பொய்யும் மெய்யும் (இகபர அனுபவங்கள்) பொருந்த பத்திரிகைத் தொழில் புரியத் துவக்கிய 25-வது வருஷபூர்த்தி மஹோற்சவமாக "வினையுடைய உள்ளுடம்பி" னனுபவத்தைக் கொண்டுரைத்தேம்.

"வெள்ளிபொன்மேனியதொக்கும் வினையுடைய
உள்ளுடம்பி னுய வொளி."—என்ற

ஔவை வாக்கால் "வெள்ளிய தொக்கும் வைபவம்" தானே "பஞ்சவிம்சதி பாக்கியம்" அல்லது 25-ம் ஆண்டுநிறை யுற்சவமாமென்பது உமென வெளிப்படையாகக் கண்டு கொள்க.

"தசமியிலே சாகரத்துக் கப்பாலேறிச்
சிலம்பொலியு முனதுடைய இருக்கால்கண்டு
நிஜமாக ஸ்தூல சூக்ஷ்மத்தில் தோன்றி
நிஷ்களத்தில் நீயுநானு மொன்றேயாகி
யறிவில்லா ஆநந்த மயமேயாகி
அருள்வெளியாய் வாமருள்வா யகண்டரூபி
சுசிவழியாய் சுசிமுகமாய்ப் பிள்ளைமுகம் பார்த்தாள்
சோதியே மனோன்மணியே சுதினவாழ்வே!" [வாய்

என்ற ஆச்சாரிய வாக்கினாலும் "எண்ணே கண்ணாயிலங்குஞ் சோதியின்" குட்டு வெளிப்படும்.

பித்தமில்லா விட்டால் சித்தமுமில்லையாம், பித்தம் தலைக்கேறுவதாவது:—சித்தவிருத்தி நிரோதனத்தால் மனதை யடக்கி லயப்படுத்தும் போது, அதுநேரத் தலைக்கேறினால் இந்திரிய ஜயம் செய்தலரிதாம்: பைத்தியம் சைத்தியமென்கிற வாத சேஷ்டைகளில் போய் முடியுமாதலால், உட்டியாண பந்தத்தால் உன்மனிபாவத்தில் பிராணனை வசப்படுத்தி அபானனோடு சேர்த்து சுழுமுனை மார்க்கமாய்த் தலைக்கேறச் செய்யல் வேண்டும்; பித்தம் உட்டயனத்தால் (ஆகாசத்தில் பறத்தல் மூலமாய்) தலைக்கேறுவதே திருக்கலியாண மென்றும் திருவருட்பேறு என்றும் சொல்லப்படும். ஸஹஸ்ரதள கமலத்தில் சிவத்தோடு சேர்ந்த குண்டலினி சிவசக்திஐக்கியஸ்வரூபமாக ஸஹஸ்ராரத்தைவிட்டுப் புறப்பட்டு ஷடாதாரங்களிலும் பிரவேசித்து (சுத்த)ஸ்தலயாத்திரைசெய்து தையடைந்து சூந்நியங்கடந்த சுபாவத்தில் 'எங்கணும் வியாபினீ" யென்கிற வாச்சியத்துக் கிலக்ஷியமாயிருத்தலே ஸப்தஸ்தான மஹோற்வம். இதை ஸ்ரீ பகவத்பாத ஆதிசங்கராசாரிய ஸ்வாமிகள் ஸௌந்தரியலஹரியில் நன்குறுகச் சொல்லியிருக்கிறார். ஓம்தத்ஸத் ஓமிதி பூர்ணமத அர்ப்பணம். சி. வி. ஸ்வா.



## The Lord of Palni's Grace.

### Of the Power of Prayer.

"What are they better than sheeps or goats
That nourish a blind life within the brain,
If, knowing God, they lift not hands of prayer
Both for themselves and those who call them friend."
—*Tennyson.*"

## பழனியாண்டவர் வரப்ரஸாதம்.

"வேலுமயிலுந்துணை."

———:-:———

"பிதற்று முணர்வை யறுத்துப் பிரபஞ்ச
விகற்ப முணர்வதேவீடு"—ஔவைகுறள்.

1. பழனியாண்டவர் தருப்ரஸாதம் தரணியில் தந்தான் அரங்கநாதன் : பழனியில் வசிக்கும் பிராமணன்கோலமாய் பஞ்சாமிர்தமெனக் களித் தானவன். நஞ்சாமிவ்வுலகை † நலமென் றுன்னி நாதையில்தூங்குவோன் தூக்கத்தைத்தள்ளினன்: தள்ளினதூக்கம் தூயவன்சாக்ஷியா நீலாயதாக்ஷி யின் நிலையறிந்தே!

2. குருவாரந்தன்னில் கோமளநாயகி குணமறிந் துபின் மணமறிந்தேன். வெள்ளிக்கிழமையில் கள்ளத்தனஞ்செய்து வள்ளியுங்குறஞ்சொல்லிக் கூடலுற்ருள். தெய்வானையொருபக்கம் வள்ளியொ ருபக்கம் திவ்யமாவிளங்கவே வந்துதித்தான்††பா தையில்நடமாடும் பாம்பொன் றுசீறியே படந்தூக்கி யென்னைத் துரத்தக்கண்டேன்.

3. தூக்கினபடமும் சீறினமூச்சுமாய் ஓடினபாம்பது உறங்கக்கண்டேன்:ஓடினபாம்பதும்ஆடினபடியே உறங்கக்கண்டுநான்கண்விழித்தேன்.உறக்கம்விட்டு நான் ‡தூரக்கமேறி ஆரூடனுகவே யமர்ந்திருந் தேன். அமர்ந்திருந்துநான்கண்டதோர் காட்சியை என்னென் றுசொல்லுவேன் எந்திழையே!

முடுகு.— நரநாரா யணனுய்
நாதவடி வினனுய்
பரநாரா யணனுய்ப்
பாரளந்தான் ரூபங்கண்டேன்!

பாரளந்தான்ஊரளந்தான்
பேரளந்தான்சீரளந்தான்
பாவியேன் படுதுயரைச்
சேரளந்தான்சீர்குலைத்தே!

I

சீரானசீரதம்மா சீர்குலையாச் சீரம்மா!
பேருனபேறதம்மா பேர்குலையாப் பேரம்மா!
சீரானபேர்குலையச் சிரிப்பாணி செய்தானம்மா!
ஊரானபேர்களாலே உருக்குலையச் செய்தானம்மா!

II

ஐயகோ!என்செய்வேன் யாரைநான் அடித்திடுவேன்!
மெய்யகோ! யான்பொய்யேன் மெய்விதிர்ப்பப் [பொறுத்திடுவேன்!
பொய்யவோபுல்லியவோ பொய்மலியப்பெற்றியவோ!
நையவோ நான்பிறந்தேன் நமன்வாய்ப்பட் டிறந்தில [னே!

III

ஐயகோ புண்ணியனே! $ யாரிடம்போய் முறையிடு [வேன்!
மெய்யகோ! தையலனே! புகலிடந்தா னெனக்கிலை [யோ!
வெய்யகோ வத்ஸலனே! வேதாந்த பூரணனே!
ஐயகோ! அடியேனை அஞ்சலென்ரு லாகாதோ!

IV

அஞ்சலென்று கையமர்த்தி ஆர்வநிறைந் தென்னை [யணைத்துக்
கொஞ்சிமிக் விளையாடிக் கூத்து 'மிகக் காட்டுவித்து
துஞ்சுமெனை யஞ்சலென்று தூயநெறி சாட்டிவிட்டு
அஞ்சுமெனை யஞ்சலென்னு தார்ப்பாட்ஞ் செய்வ [தேனே!

V

முன்னொருநாள் கிட்டவந்தேன் முதுபணியான் [செய்கவென்ருய்
பின்னொருநாள் கிட்டிவந்தேன் 'கட்டையுடை' ‡ [யெனப்பணித்தாய்
முன்னொருநாள் தேரேறித் திரிபுரமூன் றெரித் [திட்டாய்
பின்னொருநாள் புச்சத்தீயால் தென்னிலங்கைத் [தீயுமிட்டாய்.

---

† cf. Browning :—
"This world is no blot for us
Nor blank; it means intensely and means good
To know its. meaning is my meat and drink.

†† பாதை=நடைபாதை="Conduction path"= நாடி நரம்பு.

‡ தூரகம் என்பதின் விகாரம்: இங்கே 'தூரியப் புரி' யென்று கொள்ளப் பொருந்தும்.

$ புண்ய கர்மவிசேஷ வசத்தால் 'யமதர்மராஜா' என்கிற பட்டம் பெற்றவன். யமதர்ம=The Law of Being.

‡ ஸ்ரீ சொரைக்காய் ஸ்வாமிகள் மூலமா யிட்டபணி.

49



VI

சிவபுரத்தே வந்தவயன் செப்பறியான் ஓமவென்றே$
பவபுரத்தே நொந்திருக்கச் சிறைவிட்டாய் விளையா
[ட்டாய்
யுவபுரத்தே †† நொந்திருந்த குறையிறக்கச் செய்து
[மென்னை
பவபுரத்தே நொந்திருக்கச் சிறையிருத்த லுனக்கழ
[கோ !

VII

அழகோவென் னாண்டவனே யாரமுதே பேரழகே !
புகழோவென் னாண்டவனே பேரமுதே பூரணமே !
பழனியிலேயாண்டவனா யாண்டிவேஷந்தரித்தவனே!
பழனியக்ர–ஆரத்தனைப் பஞ்சாமிர்தம் தந்தவனே !

VIII

'பழனிவேலா!' வென்றுசொன்னால் பழவினைகள் பற
[ந்திடுமே !
பழனிவேலா!குக்குடமேதுவஜமாகக்கொண்டவனே!
கழனியிலே களைபிடுங்கும் அடிமையெனை யாளாவிட்
[டால்
பழனியிலே வேல்தாங்கிப் பாராள்வதெப்படியோ !

IX

வேல்தாங்கி நிற்குமுன்றன் வீரியத்தை யானறிவேன்
*கோல்தாங்கிநிற்குமென்றன் குறைதீர்க்கவந்திடுவாய்
ஆல்தாங்கி நிற்கும்வீழ்தே போல்தாங்கும் பொற்பின
[னே !
கோல்தாங்கி நிற்குமென்னைப் பாக்மாறச் செய்யலா
[மோ !

X

வேல்விழியாள் வள்ளியுன்னை வாமத்திலே கூடிநிற்க
கோல்விழியாள்தெய்வயானை கூர்வலத்தில்தானிருக்க
வேலேந்தும் திருமேனி மயில்வாகனத்திருக்கக்
காலேந்தும் பணியாளைக் கடைக்கணித்துப் பாரா
[யோ !

XI

வேலவனே சரணமையா வேலுமயிலுந் துணையளிப்
[பாய்
பாலகனே சரணமென்றால் பாலுஞ்சோறு மளித்திடு
[வாய்
மாலவன்தன் மருமகனே மையல்தீர்க்க வந்தவனே
வேலவனே சண்முகனே விக்நராஜாவுக்கிளையவனே!

வேலுமயிலுந் துணையளிப்பாய்
வேலுமயிலுமானவனே
பழனிவேலாஆண்டவனே
பழமையாஞ்சரவணபவபுவனே!

## A Blessing in Disguise: Meditations in Maunam.

### "விவேகசிந்தாமணிப் பத்திராதிபர் நீடும்வாழ்க"வென்ற விடுகதை வினா.

பழனியாண்டவர் தருப்ரஸாதம்.

தரு - இராகம் - புன்னாகவராளி - தாளம், சாப்பு.

தானதனத்தானதனத்தானதனத்தனனா
தானதனத்தானதனத்தானதனத்தனனா

கண்ணிகள்.

1. மாவறிஞர்பெயரொன்றுசிவவேடப்பேரொன்று
வண்டமிழ்நிகண்டொன்றழகின்பெயரிலொன்று
பாவளர்சீர்ப்புள்ளொன்றுகங்கைபின்பேரொன்று
பகருமரசுப்பேரொன்றுகிருபையின்பேரொன்று
பூவளர்ச்சிப்பெயரொன்று தைரியப்பேரொன்று [று
புங்கவயன்மனைவியொன்றுமிருதுவின்பேரொன்
தேவசேனாபதிவாழ்தலமொன்றாகமமொன்று
செந்தமிழகத்தயன்பேரொன்றுதிதியொன்று.
(தானதனத்தான—)

2. வேதஉபநிடதமொன்றுகுறித்தலின்பேரொன்று
மிக்கதலமொன்றுமாலையொன்றின்பப்பேரொன்
பூதலம்புகழுஞ்சத்தத்வீபமதிலொன்று [று
புளகிதமாய்ச்சொல்லுவதற்கைந்தெழுத்துப்போம்
சாதகவப்பொருளினமெழுத்தெடுத்துப்பார்க்க
தாரணிபுகழும் "விவேகசிந்தாமணிப்பத்தி
ராதிபர்நீடும்வாழ்க"வென்றுதினஞ்சொல்லும்
நற்றமிழ்க்கவிஞர்விடைசொல்வீர்மகிழ்கூர்ந்தே.
(தானதனத்தான—)

---

$ cf. "ஆமையொன்றேறி அகம்படியானென
ஓமவென்றோதி யெம்முள்ளொளியாய் நிற்கும்
நாம நறுங்குழற்றையலைக் கண்டபின்
சோமநறுமலர் சூடிநின்றாளே"—திருமந்திரம்:

† †யுவபுரம்=யௌவனத்தேயனுபவிக்கும் ஸம்ஸாரரூப சுகதுக்கம்.

* கோல்தாங்கி நிற்கும் என்றன்—எவனால் ஞானமாகிய தண்டம் (கோல்) பிடிக்கப்பட்டிருக்கிறதோ அவனை ஏகதண்டி யென்று சொல்லப்படும் என்பது பரமஹம்ஸ உபநிஷத் வாக்கியம். மற்றப்படி ஞானமில்லாமல் ஸ்தூலமான கோல்தாங்கித் திரிபவன் 'மஹாரௌரவம்' என்றுசொல்லப்பட்ட ரௌரவநரகத்தை யடைவானென்று அதேசுருதி முறையிடுகின்றது.

## இக்கவிவதைக்கு விடைப்பொருள்.

| | |
|---|---|
| அறிஞர்பெயர் | கல்-வி-மான் |
| சிவவேடப்பெயர் | திரு-வே-டம் |
| தமிழ்நிகண்டு-ஒன்று | திவா-க-ரம் |
| அழகின்பெயர் | மஞ்-சி-மம் |
| நீர்ப்புள்-ஒன்று | சகு-ந்-தம் |
| கங்கையின்பெயர் | மந்-தா-கினி |
| அரசுப்பெயர் | திரு-ம-ரம் |
| கிருபையின்பெயர் | காரு-ணி-யம் |
| வளர்ச்சிப்பெயர் | தலை-ப்-பாடு |
| தைரியப்பெயர் | மனோ-ப-வம் |
| அயன்மனைவி ஒன்று | காய-த்-திரி |
| மிருதுவின்பெயர் | சாந்-தி-ரம் |
| முருகன்வாழ்தலம்-ஒன்று | சம-ரா-புரி |
| ஆகமம்-ஒன்று | சிந்-தி-யம் |
| அகத்தியன்பெயர் | கும்-ப-சன் |
| திதி-ஒன்று | சது-ர்-த்தி |
| உபநிடதம்-ஒன்று | தாப-நீ-யம் |
| குறித்தற்பெயர் | சுட்-டு-தல் |
| தலம்-ஒன்று | கட-ம்-பூர் |
| மாலை-ஒன்று | திரு-வா-சிகை |
| இன்பப்பெயர் | மகி-ழ்-ச்சி |
| சத்தத்துவீபம்-ஒன்று | புட்-க-ரம். |

—இதின் நடுவெழுத்துக்களை யெடுத்து வரிசைக் கிரமமாக வெழுதி வாசித்துப் பார்க்க "விவேகசிந்தாமணிப் பத்திராதிபர் நீடூழ்வாழ்க"வென்றாகும்.

வி. மௌனகுரு ருத்திரமூர்த்தி ஆச்சாரியார்.
மாஜி முனிசிபல் கௌன்சிலர்.
பழனிஸ்தலம்.

## The Lord's Play at Hide and Seek.

"Work is the first chapter of human life, God is its conclusion. To work unattached is exceedingly difficult in this world of ours where the senses are worshipped!"—**Sri Ramakrishna Paramahamsa.**

## ஸ்ரீ கோபாலகிருஷ்ணன் கூத்து!

*"சேசந்தியம்பாரம்
சிவராத்திரியம்பாரம்
ஸ்ரீ கிருஷ்ணராயருக்கெண்ணெய்!
பட்டினியம்பாரம்
பாணியம்பாரம்.
பாலகிருஷ்ணனுக் கெண்ணெய்!

எண்ணெய்வார்த்தாலெண்ணெய்!
உள்ளாக்கட்டி பொம்மை!
லாசி வாத்தா லாசி †
உள்ளாக்கட்டி பீசி ‡

முடுகு : கொக்கு நிற்க நிற்க
குளம் வத்த வத்த ஸ்ரீ
கோபாலகிருஷ்ணனுக்
கெண்ணெயோ வெண்ணெய்!"

—கோபாலகிருஷ்ணன் கூத்துப்போட நாட்டுப்புறத்துச் சிறுவர்கள் வீடுதோறும் எண்ணெய் தண்டும் பாட்டு.

---

கூத்துப்பார்க்க வாரும் சுதரே! — கலிகாலக்
கூத்துப் பார்க்க வாரும்!

(1) பிறந்தோர்வம்சம் புகுந்தோர்வம்சம்
கறந்தோர்பாலிற் புகுந்தோர்நெய்க்கழுங்
கோபாலகிருஷ்ணன் கூத்துப்பார்க்கவாரும்
கலிகாலக் கூத்துப் பார்க்க வாரும்! சுதரே!

(2) நிறைந்தவோர்பானையில் மறைந்தவோர்கள்வன்
குறைந்தவோர்மூலையில் கரைந்தவோர்செல்வன்
கோமாளிக்ருஷ்ணன் கூத்துப்பார்க்கவாரும்
[சுதரே!
இந்தக் கலிகாலக் கூத்துப்பார்க்க வாரும்!

(3) தன்னய மறியாத் தற்பர நாயகன்
சொன்னய மறியாச் சூர்யசங் கற்பன்
மார்ஜாலராமன் மாயக்கூத்துக்காண் வாரும்
கலிகாலக் கூத்துக் காண வாரும்! [சுதரே!

(4) நன்னயமில்லான் நாமகள்சிலம்பொலிச்
சொன்னயமெல்லாஞ் சூந்யமாக்குவான்
என்னயமெல்லாம் பொன்னயமாக்குமோர்
கோபாலகிருஷ்ணன் கூத்துப்பார்க்கவாரும்
[சுதரே!

(5) சொல்லியுங்கேளான் சொல்லினுக்கடங்கான்
மெல்லியர்போல்மன மொழிமெய்மாறுவான்
கோமாளிக்கிருஷ்ணன் கூத்துப்பார்க்கவாரும்
[சுதரே!
யவன்கலிகாலக் கூத்துப் பார்க்க வாரும்!

* சேசந்தி=ஸ்ரீ ஜயந்தி அம்பாரம் = அம்பரம் (ஆகாசம்) என்பதின் திரிபு.

† லாசி='வாசி' (வாயுசாரணை) யின் விகாரம்.

‡ பீசி=மீசி, மீசை யென்பதின் திரிபு.

## The Uprising or "Uplift."

## "உட்டியாண பந்தம்."†

### திருவெம்பாவாய்!

—(o)—

"எந்தக் காரணத்தால், எந்த பந்தத்தால் கட்டுப் பட்ட பிராணன் சுழுமுனை யென்னும் மத்தியநாடி யில் பறக்கின்றதோ, அந்தக் காரணத்தால் அது மச் சேந்திரர் முதலிய யோகிகளால் உட்டியாணபந்த மெனப்பட்டது.''—ஹடயோக தீபிகை.

"உட்டீயனம்''=பறத்தல். இந்த பந்தத்தால் பிரா ணன் சுழுமுனையில் பறக்கின்றமையால் உட்டீயன மென்ப்படுகிறது. "நாபியின் மேற்கீழ்ப் பாகங்களை மிகமுயற்சியால் (முதுகோடொட்டும்படி) பின் இழு க்கவேண்டும்: ஆறுமாசம் அப்பியசித்தால் மிருத்தி யுவை ஜயிப்பன். இதில் சந்தேகமில்லை.'' பந்தங் களெல்லாவற்றிலும் உட்டியாணபந்தமே உத்தமம். ஏனெனின் உட்டீயனம் திடமாகச் செய்யப்படின், முக்தி இயல்பாகவே யுண்டாம்'.—ஹடயோகதீபிகை.

"எல்லாவற்றையும் பற்றி எனக்குக் கடிதத்தில் எழுத மனம் துணியவில்லை. காசுமாலையோடு உட்டி யாணமும் பண்ணுவாயானால்.......பார்க்கலாம்.''
—கடிதம்

"வாயுமனமுங் கடந்த மனோன்மணி
பேயுங்கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயுமறிவுங் கடந்த வரனுக்குத்
தாயுமகளு நற்றாரமுமாமே.''—திருமந்திரம்.

"தாயாயிருந்து தன்னுருத் தந்தவள்
பேயாயிருந்து பொன்னுரு வானவள்
மகளாயிருந்து மின்னுருக் கொண்டவள்
தாரமுமாவளிரு-த்சாரமத்தியில்.''-திருவாக்.

### திருவெம்பாவாய்!

"மேலவே தானிருந்து வேணமட்டுங் கைகொடுப்பேன்
கீழவே நீயிருந்து தாவிப்பிடி யென்றாள்''—ஆனந்தத்தாய்
[மொழி.

1. "புன்னையங்கானல்''—சமஷ்டி உயிர்.

"வருதியோ எம்பாவாய்'' என்றுள்ளந் துடிக்கமிகக்
கருதியோ எம்பாவாய் கண்ணிலார் ‡வசமானாய்!
சுருதியோ டறுதியெல்லாம் சூக்குமையா லுணர்ந்த
[பின்னும்
*குருதியோடுறுதியிலாவுன் னுயிரைவதைக்கலாமோ!

2. "பெண்கிளி''—பறையில்வாக்கு.

வதைக்கலாமோ பெண்கிளியைப் பொன்பறிக்க
[வாசைகொண்டு!
பதைக்கலாமோ வென்வயிறும் பூனைவாயிற் *பட்டா
யென்றே!
சிதைக்கலாமோ வுன்சீரைச் சிறையிலிட்டுக்
[கொடுமைகண்டு!
விதைக்கலாமோ தீவினையை வீணாசைப்பேய்பிடித்து!

3. "பூதாசுரன்''—மாயாமோசம்.

வீணாசைப் பேய்பிடித்துவீணான வார்த்தைசொன்னான்
பூணாசைப் பித்தேறிப் பெண்ணைவிடச் சொல்லிவந்
[தான்
நாணாசை ‡தாண்டவுன்னை, நமன்வாயிற்கிரையானாய்;
ஊணாசை கொண்டேயுன்னை நம்பவைத்து மோசஞ்
[செய்தான்!

4. "புருஷாமிருகம்''—அவித்யாஸம்பந்நன்

(மாயாமோசம்.)

மோசஞ்செய்தான் நம்பவைத்து ரோஸங்கெட்ட $
[மூடனவன்
காசஞ்செய்தான் பாசம்வைத்துக் காசுபறித் திட
[வெண்ணி
நேசஞ்செய்தான் காசுக்கென்று நீதிகெட்ட வேசி
[மகன் §
கோசஞ்செய்து கொடுமைசெய்தான் சதுர்வேத
[வஞ்சனம்மா!

---

† 'பந்தம்' என்றாலும் 'பந்தனம்' என்றாலும் ஒன்றே. 'உட்டியானம்' என்றும் பாடமுண்டு.

‡ c-f. "கண்ணுக் கணிகலம் கண்ணோட்டம்''—அஃதில்லார் குரூர சித்தமுள்ளார்.

* குருதி=இரக்தம்

* 'கிளியை வளர்த்துப் பூனையினிடம் கொடுத்தல்' என்கிற பழமொழிலக்ஷியம்:மெய்ப்பய்யன் அளிக்கும் 'வாய்மை'யாம்வாக்கைப்பொய்ப்பயனளிக்கும் பொய் மையாம் மாயையின் வசம் ஒப்பிவித்தல். "வாய்மை யாற்பொய்யா மனத்தினால் மாசற்ற, தூய்மையாமீ சனருள்'' என்றார் ஔவையாரும்.

‡ ஹ்ரீங்காரப்பிரியம்: c-f. "ஹ்ரீங்காரத்தினி திருந்தவளே.''

$ உள்ளுணர்வில்லா அவிவேக அவித்யா ஸம்பந் நன்.

§ மாயாபுருஷன். c f "Intellect is a whore"—Emerson

5. "விருஷபோற்சவம்"—"தத்துவமஸி"

சதுர்வேதவஞ்சனம்மா விதித்தானிவ்வல்லலெல்லாம்
யஜுர்வேத சாகை "யஹம் ப்ரஹ்மாஸ்மி" யென்று [சொன்னன்!
பிதுர்வேத வாக்காமந்த "தத்துவமஸி" வாக்கியத் [தைச்
சதுர்வேத ஸத்புருஷன் வாக்காயுனக் கோதுவனன்.

6. 'ஆனைகட்டினமரம்'—"ஆவரணசேஷ்டை"

ஒருவனன் உண்மைதனை யுள்மர்மங் கண்டுணர்வாய்
கோதுவரா தொழுகுவோர்க்குக் கோடுமையில்லை யிவ் [வுலகில்
போதுபோகா துளறுவோர்க்குப் போகசுகஞ் சிறிது [மில்லை!
சேதுபந்தம் † செய்தராமன் சிதைபுகழ்உட்டியாணங் [கேள்.

7. "இரதாரோஹணம்"—"ஆத்மநிஷ்டை"

உட்டியாண மென்றுசொல்வர் சிற்றிடையார் பூண் [பணியை
"உட்டீயன" ‡ மென்றுசொன்னுற் பற்றுமுற்று மற் [றுப்போம்:
உட்டியாணம் பூணவேண்டில் உள்ளாசையறல்வேண் [டும்
உட்டியாணம் பண்ணவேண்டில் பேராசை தீரவே [ண்டும்.

8. "பரிவேட்டை"—"உட்டியமலக்ஷணம்."

பேராசை தீரவேண்டும் பேய்க்கூத்தும் கிறகவேண் [டும்
கூராசை கொண்டமகன் கொட்டமுந்தா னடங்கவே [ண்டும்
$ நீராசை கொண்டவுன்றன் பித்தமுந்தான் இறங்க [வேண்டும்
நேராசை கொண்டவுன்றன் சித்தமுந்தான் தெளிய [வேண்டும்.

9. "தங்கத்தோட்டி"—"நிஷ்காமியதர்மம்."

தெளியவேண்டும் சித்தமுந்தான் உட்டியாணம் பூண [வேண்டில்
தெளியவேண்டும் ஆசைதானும்உட்டியாணம் பண்ண [வேண்டில்
தெளியவேண்டும் புத்திதானும் புன்மைவிட்டு நன்மை [பற்றித்
தெளியவேண்டும் பொய்பேசும் பித்தலாட்டத் தன [முமம்மா!

10. "தாருகாசுரன்வதை"—"காமிய தபலறுத்தல்."

பித்தலாட்டத் தனமும்மா போகவேண்டும் பூரணமா-
பித்தலாட்டம் செய்யும்புத்தி புநிதமாகத் தேறல்வே [ண்டும்
பித்தலாட்டம் செய்துபணம் பறிக்குமாசை யறல்வே [ண்டும்
பித்தலாட்டம் செய்துபெண்ணைப் † படுத்தும்புத்தி [மாறல்வேண்டும்.

11. இதுவுமது—துஷ்டநிக்ரகம்.

மாறல்வேண்டும் பேராசைமாறல்வேண்டும்தூராசை ‡
மாறல்வேண்டும்காசாசை மாறல்வேண்டும்பணவாசை
மாறல்வேண்டும் பொன்னாசை மாறல்வேண்டும் மன [வாசை
மாறல்வேண்டும் ஆசையெல்லா முட்டியாணம் பூண [வேண்டில்.

---

† 'மிருத்தியுவை வென்ற ராமன்' என்றபடி.

'சேதுபந்தம்' என்றாலும் மூலபந்தம் 'என்றாலும் ஒன்றே. முன்னது பாஹியார்த்தம், பின்னது அந்தரார்த்தம்." மூலபந்தத்தால் கீழ்ச்செல்லும் அபான வாயு மேற்செல்வதாய் அக்கினிமண்டலத்தை யுடையும். ஜாடராக்கினியின் சிகை வாயுவோடு சேருதலால் நீளுகின்றது." அக்கினிமண்டலம் நாபியின்கீழ்ப்பாகத்தில் த்ரிகோணமாயிருக்கின்றது.—ஹடயோகதீபிகை.

c-f "முன்னைவிட்டதீ முப்புரத்திலே
பின்னையிட்டதீ தென்னிலங்கையில்
அன்னையிட்டதீ யடிவயிற்றிலே"

‡ உட்டீயனம் = பறத்தல், உட்டியாணம்=பிராணனைக்கட்டிப் பிடித்து ஆகாசத்தில் (சுழுமுனைமார்க்கத்தில்) பறக்க (பிரவேசிக்க)ச் செய்தல்.

$ பித்தம் சிறினல் ஜலத்திலொடுங்கி மேகநீராகி நாடி நரம்புகளைக் கட்டும். சீற்றம் தணிந்தால் மேகோஷ்ணம் குறைந்து நீரிறங்கும். "நேராசை"=நிஷ்காம்யகர்மததில் ஆசை: கர்மபலாபேக்ஷையின்றி கர்மத்தைச் செய்ய ஆசைப்படல் பந்தத்தைக் கொடாததலால் 'நேராசை' யென்று குறிக்கப்பட்டது.

† c-f. "புதுமணப் பெண்ணும் பேரன்பு வெள்ளம்." (See 9.)

‡ தூராசையின் நீட்டல்விகாரம்.

### 12. "பிருந்தாவனபோஜனம்"—சிஷ்ட பரிபாலனம்.

உட்டியாணம் பூணவேண்டி லுள்ளாசை யொழிய [வேண்டும்.
உட்டியாணம் பூணலம்மா உள்ளாசை யொழிந்ததெ [ன்றே!
உட்டியாண பந்தமம்மா உள்ளாசை யொழிக்குந் [தானே!
உட்டியாண பந்தசீதை யிராமனுக்கே யுரியவள்காண்!

### 13. ப்ரதோஷ விசேஷம்—பரோக்ஷ தரிசனம்.

உரியவள் காண் சீதையுமே யுட்டியாண பந்தமதால்
உரியவள்காண் சீதையுமே சேதுபந்த ராமனுக்கு
உரியவள்தன் உரிமைதானும் உட்டியான பந்தமதால்
உரியவளும் உரியவனும் ஒன்றுபடில் உட்டியானமாம்.

### 14. "அபரோக்ஷ சாக்ஷாத்காரம்"—அனுபவானந்த உறுதி.

உட்டியாண மாமந்த உயர்பந்த னஞ்சொன்னேன்
உட்டியாண மாமிந்த உயர்பூணும் உள்நோக்கில்
உட்டியாண மாமந்த உயிருடல் † ஒன்றுசேரக்
கெட்டியாம் பொன்மேனி‡யிடைமருங் கதுவாமே.

### 15. "அனுக்ரக விசேஷம்"—உட்டியாண மளித்தல்.

பொன்னிடை மருங்குள துட்டியாண பந்தங்கேள்
மன்னிடை மருங்குள மாயையும் அதுவே
என்னிடை மருங்குதித் தருமேவயுருவா யமர்ந்தபெண் [மயிலே!
உன்னிடை மருங்கிலோர் "உட்டியாண" பந்தன [முளதறிவாயே!

### 16. "ஆத்மஸம்பூர்ணம்"-உட்யாணந்தரித்தல்.

"உட்டியாண" பந்தன முளதறிவாய் பெண்மயிலே!
உட்டியாண பந்தன முளவறிவாச் * செய்தவரே
உட்டியாண பந்தனமுள்ளறிவாய்க் கண்டுகொள்வா
ருட்டியாண முத்திரையும் எனையின்றாள் $ இடை [மருங்கே!

ஓம் உட்டியாணபீட நிலயாயை நமஃ

---

† உயிருடல்=நாதபிந்து. c-f. "அழியாதிவ்வுடலங்காண் நாத பிந்து சேர்ந்தால்." [யுடைய

‡ c-f. "வெள்ளிபொன் மேனிய தொக்கும் வினை உள்ளுடம்பி னுய வொளி."-ஔவைகுறள்.

* குருவழிப்பட் டுணரவேண்டிய இரகஸியமாம் சிவயோக முறையால்.

$ c-f. "பொய்யா யெல்லாஞ் சிருஷ்டிக்குந் திறமையினாலின்றேனவன்."—சூதஸம்ஹிதை. c-f. "உட்டியாணபீட நிலயா"— இரகஸிய நாமாவளி.

## Bee-Stings-Cure for Rheumatism.

——(:–:)——

### வாதக்கட்டுக்கு வைத்தியம்; தேனீக்கொட்டு.

வாதக்கட்டுக்கு தேனீக்கொட்டு கைகண்ட வைத்தியம் என்று பரீக்ஷித்துக் கண்டிருக்கிறார்கள். 10 வருஷம் 15-வருஷங்கள் வாதக்கட்டினால் வருந்தினவர்களெல்லாம் தேனீக்கொட்டினால் குணப்பட்டுத் தேறியிருக்கிறார்களென்றும், அதற்காகச் சில வைத்தியர்கள் தேனீக்களை வளர்த்து வருகிறார்களென்றும் தெரிகிறது. வாதக்கட்டுக்குத் தேனீக்கொட்டு வைத்தியமாவது எப்படி?

"பிரமரகீட நியாயம்" என்று சொல்கிறார்களே, அப்படி யென்றால் என்ன தெரியுமா? பிரமரம் என்றால் வண்டு: கீடம் என்றால் புழு. வண்டு (beetle) கூடுகட்டி பச்சைப்புழுவைக் கொண்டுபோய் அதில் வைத்து நியமமாய்க் கொட்டி ரீங்காரஞ் செய்து வருகையில், கொட்டுப்பொறுக்காமல் புழுத்துடிக்க, அப்பொழுது வண்டின் ரீங்காரத்வனி நாதாகாரமாய்த் துடிக்கும் அதன் பிராண நாடியின் நேரொலியோடு கலக்க, சமுத்திரத்தைச் சேர்ந்த நதிஜலம் அதன் மயமானாற் போல், பச்சைப் புழுவின் பிராணன் துடிக்கும் நாதம், வண்டின் ரீங்காரத்வனியினால் விழுங்கப்பட்டு அதன் மயமாக மாறி விடுகிறது. ஹ்ரீம் என்ற தாதுவுக்கு லஜ்ஜை யென்று பெயர், ஹ்ரீங்காரம் என்று அவ்யக்த ரூப மூலப்பிரகிருதிக்குச் சொல்கிறது. தாயுமானவரும் "நாதவடிவான மஹா மந்திராதிரூபியே" யென்று பாடியிருக்கிறாரல்லவா! ஆதலால் வண்டின் ரீங்காரத்வனி நாதவடிவுக் கறிகுறியாம். நாத தத்துவத்திலிருந்து பூதங்களுண்டாகும் பரிணாமக் கிரமத்தையும், பூதங்களெல்லாம் காரியகாரண தோரணையாக ஒன்றிலொன்று அடங்கி யொடுங்க எல்லாம் நாதமாத்திரமாக எஞ்சி நிற்கும் லயக்கிரமத்தையும், "பஞ்சீகரணவிதி" யென்று சொல்வர்.

"பூதமுதலாகவே நாத பரியந்தமும் பொய்யென்றனைக்காட்டி" யென்றமையால் இவை யெல்லாம் 'ஜகத்பாவம்' அல்லது 'தோற்றமாத்திர' மாமென்றுணர்வார், தத்துவஞானிகளாவார். 'விருத்திக்ஷயலய

முறையை யறிந்தவர்கள் பஞ்சீகரணவிதியை யறிவார். இந்தப் பஞ்சீகரண விதியே பஞ்சஜந்நியம் என்கிற சங்குமாம். ஜகத்காரணரும் ஜகத் ரக்ஷகருமானபகவான்" சங்குசக்ர கதாபாணி யாகநிற்பது சிருஷ்டிஸ்திதி ஸம்ஹார கிருத்தியங்களுக் கெல்லாம் அவர் கர்த்தவாயிருக்கிறார் என்பதைக் காட்டுவதன்றி வேறல்ல:

சங்கினால் சிருஷ்டியும் (பஞ்சீகரணமும்) சக்கரத்தினால் ஸம்ஹாரமும் (ஒடுக்கமும்) கதையினால் பிராணதாரணமும் செய்கிறார்.

மனிதனது இந்த பஞ்ச பௌதிக ஸ்தூல தேஹத்தை சாதன சாதக சாத்திய முறையறிந்து கையாடினால் ஜீவகாரணமான ஆத்மாவுக்கழிவின்றி தேஹத்தைக் கரைத்து நாதத்திலொடுக்கி, நாதத்திலிருந்து தேஹத்தையுண்டு பண்ணலாம்.

வாதநோவென்பது வாயுவின் சீற்றமன்றி வேறல்ல. வாயுச்சீறினால் ஜாடராக்னி நீறாகும். நீறான தூளனம் ஜலத்தில் சேர்ந்து, ஆகாயத்தில் வாயுவின் சீற்றத்தால் மேகநீர் ஆகாயத்தில் தானே யுறைந்து கட்டி மழையாகப் பொழிவதுபோல், இரக்தமானது கட்டி விழத்தோய்ந்துபோக நாடி யோட்டம் தடைப்பட்டு முடையுற்று நிற்கிறது.

இதனால் வாதக் சட்டுண்டாகிறது. தேனீக்கொட்டு இதற்கு நல் வைத்தியமாவேனேன் என்றால் சொல்லுகிறேன் கேளுங்கள்:—

குண்டலிநி (ஜாடராக்நிமுதல்சிதக்னிவரையிலுள்ள பஞ்சாக்னிகளும்) தூக்கம்விட்டெழுந்து சீறினால் தாதுக்களேழும் வெந்துநீறாகும். நீறானதாதுக்கள் நாடி நரம்புகளின் துவாரத்திற் சிக்கிக்கொண்டு அவைகளை யடைத்துக்கொள்ளாதபடி, 72-ஆயிரம் நாடிகளையும் அமிருத வருஷத்தால் அடிக்கடி நனைக்க வேண்டுமென்று உபநிஷத்துக்களிலும் சுகஸம்ஹிதையிலும் முறையிட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி நனைத்து வந்தால், பட்டமரம் பாலொழுகுவதுபோல் சுட்ட தாதுக்களெல்லாம் 'கட்டு விட்டுத் கலந்து சேரும்.' இதனால் தேஹ மிருக்கையில் தானே அணுத்திரள்கள் மூலமாய் 'செத்துப் பிழைக்கலாம்.' இப்படி செத்துப் பிழைத்தால் புனர்ஜன்மமுண்டாகி, 'தேஹோஹம்' என்கிற பாவம் நீங்கி, 'சிவோஹம்' என்கிற சிந்தை யுதிக்கும். 'சிவோஹம்' என்கிற சிந்தை நாத வடிவான சித்தத்தில் தான் உண்டாகும். ஆகையால் எப்படியாவது, தேஹத்தைக் கொட்டிப் பிராணனைத் துடிக்கச்செய்தால், உள்ள முணராமலே நாதமென்கிற பிரணவ குணத்வனி யுண்டாகும். அந்த அவஸ்தையில் மனது உருக்கின தங்கம் போலிருப்பதால் நினைத்த வுருக்கொள்ளும். அப்பொழுது 'தேஹசுகம்' வாஸ்தவத்தில் தானே க்ஷணமாத்ரை யளவாக ஸித்தித்திருக்கும். அந்த க்ஷணமாத்திர சுகத்தை நீடித்து வளரச்செய்தால் அது எல்லா வியாதியையும் போக்கி சுகத்தை யளிக்கும். இதுதான் வசீகரத்தினால் வைத்தியம் செய்வோர் அப்பியசிக்கும் "hypnotic power" என்கிற வசியசக்தி.

தேனீக்கொட்டு ஏன்? தேளைக்கொண்டு கொட்டவிடக் கூடாதா? என்று கேட்கலாம். இதுதான் ஆத்ம சங்கல்பத்துக்கும் (சுத்தமனதினால் காமத்தைக் களைந்து சங்கல்பித்தற்கு),காமஸங்கல்பத்துக்குமுள்ள வித்தியாஸம். தேனீ சுத்தாகாரமுண்டு அமிர்த ரஸத்தினால் ஜீவிக்கும் ஜந்து. அது சுத்தமனசுக்கு உதாரணம். தேள் மல மூத்ராதி (எருமைச்சாணி போன்ற) அசுத்த வஸ்துக்களிலிருந் துண்டாகும் புழுக்கம் நிறைந்த விடத்தில் வளருவது. அது அசுத்த மனதுக்குச்சரி. சுத்த சங்கல்பம் எப்போதும் நிஷ்காம்ய கர்மத்தால் சுகத்தைக்கொடுக்கும். அசுத்த சங்கல்பம் காமிய சங்கல்பங்களை வளர்த்துக் கர்ம பந்தத்தை யுண்டுபண்ணும். இந்தக் கர்மபந்தமே தேஹத்தல் "வாதக்கட்டு." ஆதியில்லாமல் வியாதியில்லை. சித் அன்றிச் சடமில்லை. அறிவின்றி அறியாமையில்லை. பகலின்றி இரவில்லை. சூரியனில்லாமல் சாயா தேவியில்லை. ஆகையால் இப்படி 'துவந்துவ' ரூபமாயுள்ளவைகளுக்கெல்லாம் நிவாரணம் லய யோகமே. பிராணாயாமமின்றி லயயோக மில்லையால், பிராணாயாமமே எல்லாவற்றிற்கும் ஆரணமும் காரணமுமாயிருக்கிறதென்று சொல்லலாம். தேனீக் கொட்டினவன் ஒரு விதத்தில் பஹிர்முகவிர்த்தியற்று (பிரத்தியாஹார சித்தியால்) எளிதில் பிராகிருதப் பிராணாயாமஞ் செய்கிறான். அப்பொழுது தேனீக் கொட்டினால் சுகம் ஜநித்ததாக நினைப்பதால் அவன் அந்த சுகத்தை சுத்த சங்கல்ப விசேஷத்தால் அடைகிறான். இதுவே யங்குள்ள மர்மம்.

ஓம் தத்ஸத்.

——:-:——

# LALITAMBAL.
# லளிதாம்பாள் சரித்திரம்.

I.

"அந்தணரென்பர் அறவோர்."

"இதுதானோ தில்லை ஸ்தலம்!" என்று நந்தனர்கண்டு உவகைமேலிட்டு உடலுருகக் கரங்குவித்துத் தொழுத தில்லை மகாக்ஷேத்திரமாம் சிதம்பரத்துக்குப் பதினெட்டுமைல் தூரத்திலே கருவேலங்காடு என்ற ஒரு கிராமம் இருக்கிறது. அதற்குக் "காட்டு விண்ணார் கோயில்" என்கிற மறுநாமம் உண்டு. இந்த ஊரிலே விஷ்ணுவாலயம் ஒன்றிருக்கிறது. அவ்வாலயத்திற்குத் தெற்கேயுள்ள ஒத்தைத் தெருவில் வாமதேவ சாஸ்திரி என்று ஒரு பூஜ்யர் இருந்தார். அவருக்கு ஆறுபாஷைகள் பேசவரும். அத்தியயனம் ஏதோ செய்திருக்கிறார். சாஸ்திரங்களும் கொஞ்சம் பார்த்திருக்கிறார். பூர்வத்தில் சோழராசன் ஆண்டகாலத்தில் இவர் வமிசத்தவர்கள் சாஸ்திர பாண்டித்தியம்பெற்ற வைதிக சிரேஷ்டர்களாயிருந்தமையால் அக்காலத்தில் அவர்களுக்கு விட்டுவந்த ஸர்வமானிய நிலம் இன்னமும் அவர்கள் வசத்திலிருக்கிறது. சாஸ்திரியாருக்கு ஜீவன கஷ்டமில்லையால் குடும்பவிசாரம் கொஞ்சமும் கிடையாது. புத்திர சந்தானமில்லை. பெண் குழந்தைகள்மட்டும் உண்டு. அவர்களில் மூத்த பெண்ணுக்கு எழுவயதாய், எட்டாவது வயது பிறந்துவிட்டது. குடும்ப விசாரமற்றுக் குதூகலமாயிருந்த சாஸ்திரியாருக்குக் கவலைவந்து மூண்டுக்கொண்டது. ஏனென்றால், "குழந்தைக்குக் கன்னிகாதானம் செய்யும் வயது வந்துவிட்டது: நல்லவரன் பார்த்து இந்த வருஷமே காலந்தப்பாமல் குழந்தையைக் கன்னிகாதானம் செய்து கொடுத்துவிடவேண்டும்! என்னசெய்கிறது!" என்று மருளமருள விழிப்பார்.

திருவசலூர் என்றும் திருவிசை நல்லூர் என்றும் பேர்பெற்ற மஹா க்ஷேத்திரமொன்று இருக்கிறது. இதற்கும் மத்தியார்ஜுனத்துக்கும் (திருவிடைமருதூருக்கும்) நடுவில் இரண்டு புண்யநதிகள் ஓடுகின்றன. அங்கே ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மமென்று புகழ்பெற்ற சித்தபுருஷர் அவருடைய சகபாடிகளோடு வித்யாப்பியாசம் செய்துவந்தார். பூர்வந்தொட்டு மஹான்களால் பிரகாசிக்கப்பெற்ற இடம். இல்லறத்துறவியும் ஸஹஜானுபவ ஞானியுமாகிய ஸ்ரீ வேங்கடேசுவர ஐயாவாள் ஜ்யோதிமஹாலிங்கத்தின் கிருபைபெற்று பூரணனுக்கிரக விசேஷத்தால் ஸ்வானுபவச் செல்வராய் வாழ்ந்த புண்யக்ஷேத்திரம் இது. இன்றைக்கும் அந்தவூரிலே அவருடைய மடம் ஒன்று இருக்கிறது. அவருக்கு கங்காதேவி வந்து கிருபைபாலித்த கிணறு அந்த மடத்தின் கொல்லையில் தானே யிருக்கிறது.

ஸ்ரீ ஜ்யோதிமஹாலிங்கருடைய வரப்பிரஸாத வள்ளலாரான ஐயாவாள் ஸ்வானுபவ விருத்திபெற்ற பின்னும் இல்லறத்துறவியாயிருந்து அந்தர்யஜ்ஞஞ் செய்து பகவானைப் போற்றித் தொழுது வந்தார். பகவன்நாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டு பாகவத சிரேஷ்டராய் அவர் ஜீவயாத்ரை செய்துவரும் காலத்தில், அவருடைய ஜீவகாருண்ய மகத்துவத்தை வெளியிடவேண்டி ஜ்யோதிமாகாலிங்கர் திருவுளம் பற்றலானார். ஒருநாள் காலையில் ஐயாவாள் வழக்கம்போல் விடியற்காலையில் நதிக்கரைக்குச் சென்று ஸ்நானம் ஜபம் தபமெல்லாம் செய்து முடித்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பும் பொழுது, ஜ்யோதிமஹாலிங்கர் தானே ஒரு சண்டாள வேடங்கொண்டு பசியினால் மூர்ச்சித்து வருந்துபவராய், வழியில் கலைபோட்டு விழுந்து, அவ்வழியே போகும் பிராமணர்களை யெல்லாம் தன்பசிக்களைதீர ஒரு கவளம் சோறு போடல் வேண்டுமென்று கேட்டு வருந்திக் கொண்டிருந்தார். வழியே சென்ற பிராம்மணர்களெல்லாரும் அவனைவைது திட்டி அவனுடைய அருகே சென்றாலும் தீட்டு ஒட்

டிக் கொள்ளுமென்று, 'ஐயோ! பாபம்! சண்டாளன் வழியில் கிடக்கிறானே'யென்று, அவனை விலகிப் போம்படி தாக்கீது செய்தும், அவன் நகரமாட்டாமல் கிடந்தமையால், அவரவரும் தங்கள் வழிவிட்டு விலகி யோழுகி வீடு சென்றார்கள்.

"அந்தணரென்பர் அறவோர் எவ்வெவர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுகலால்"

என்ற பொய்யாமொழி, இவர்களிடத்தில் மட்டும் பொய்த்துப் போகலாயிற்று. ஐயாவாள் வரும்பொழுது அந்தச் சண்டாளன் அவரைக் கண்டு கூவிக் குறைபிரந்து தன் பசிக்களை தீர ஒரு கவளம் சோறு கொடுத்துப் பிராணனைக் காத்துப் பிராணதாதாவென்று பெயரெடுக்க வேண்டுமென்று கேட்டான். அவனுடைய பரிதாப நிலைமையைக்கண்டு உள்ளம் உருகி உடல் விதிர்ப்ப நடுநடுங்கி "என் அப்பனே என் பின்னே சற்றுதூரம் எழுந்து வரத் தானும் சக்தியுண்டோ!" வென்று உள்ளன்போடு விசாரிக்க, அச்சண்டாளன்: "ஐயா! பசிக்களையால் நகரவும் சக்தியற்றேன்! ஆயினும் தங்கள் வாய்ப்பிறந்த கருணைமொழி செவிப் புகுதலும் எனக்குள் என்னை யறியாது ஒருவித திடம் உண்டாய் தேஹத்துக்கு உறுதி பயக்குகிறது! ஆகையால் உத்தரவானால் மெள்ள மெள்ளத் தத்திக்கொண்டு வருவேன். ஆனால் அக்கிரஹார வாசலில் வந்தால் என்னைப் பார்ப்பாரச்சாதியார் புடை புடையென்று புடைத்து விடுவார்களே யென்று அஞ்சுகிறேன்!" என்ன,--ஐயாவாளும், கருணை மிகுதியால் "அப்படி யாயின் இதோ நான் வீடுபோய்ச் சோறு கொண்டுவந்து போடுகிறேன்" என்று ஒரு எட்டாய் வீட்டுக்குச் சென்று அங்கே அன்றைக்குப் பிதுர் தினமாகையால் எல்லாரும்ஸ்நானம்செய்து மடியாக விருக்கக்கண்டு, தான் தானே பழையவமுது பானையைத் தொட்டு அன்ன மெடுத்துக் கொண்டு ஓடோடியும் வந்து உப்பிட்ட சோறுதனை உவகையுடன் தனது திருக்கரத்தாலேயே அச்சண்டாளனுக்களிக்க அவன் இருகரமேந்திப்புசித்து ஐயாவாளை வாழ்த்திவிட்டு மாயமாய் மறைந்துபோனான். ஐயாவாள் இதுவும் எம்பெருமான் திருவிளையாடல்களில் ஒன்றே யென்று உள்ளம் நிறைந்த உவகையோடு ஆனந்த பாஷ்பம்விட்டு ஜ்யோதிமஹாலிங்கத்தின் திருவருளைத் துதித்துத்தொழுது நிற்கும் பொழுது இந்தசெய்தி ஊரெல்லாம் பரவி விட்டது.

திருவசலூர்ப் பார்ப்பினர் குலமெல்லாம் ஐயாவாள் செய்த அருஞ்செயலின் பெருமை புணர மாட்டாதவர்களாய், திருவருளுக்கு அயலார்தாமே யானவர்களாய், அவர்களுடைய அஜ்ஞான அந்தகாரத்தி லுதித்தெழுந்த காமக் குரோத லோப மோக மத மாச்சரியங்களான ஷடூர்மிகளுக் கீடுபட்டவர்களாய், "பிதுர்தினத்தன்று சண்டாளனுக்குச் சோறுபோட்டானாகையால், இவன் ஜாதியிழந்தனன்" என்று பலவாறு தூற்றி ஐயாவாளைக்கண்டு பகலைக்கண்டொதுங்கும் இரவன்ன எல்லாரும் ஒதுங்கி நின்றார்கள். ஐயாவாள் அவர்களுடைய நடத்தைக்குக் காரணமின்னதென்று ஊகித்துணர்ந்து அது "சுபாவம்" தானேயென்று ஏதும் மறுமொழிகூறாது திருவருட்சிந்தனையி வீடுபட்ட மனத்தினராய்பஞ்சபத லக்ஷணத்திலும் மௌனம் சாதித்துச் சும்மாவிருந்தார்.

இங்கே பஞ்சபத லக்ஷண மென்றால் என்னவென்று சற்றுச் சொல்லவேண்டிய தவசியம். வாக்கியங்களிலெல்லாம் சிறந்தது மஹாவாக்கியங்கள். இவை நாலு வேதங்களுக்கும் அறுதியாயிருந்து மனிதனது ஆத்மத்துவத்தை (ஆத்மலக்ஷணத்தை) புணர்த்தும். இவைகளுக்கும்மேலாய் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததாய் மோனமேபுருவாயுள்ள "வாக்கியாதீத மென்றொரு வாக்கியமுண்டு."

"ஞானமென்பது மோனவரம்பு" என்ருர் ஔவையாராதலால், இந்த வாக்கியாதீதமான வாக்கியம் ஞானத்திற்கு 'மோனவரம்பாய்' விளங்கும். அந்த வாக்கிய மென்னவென்ருல்: "துவந்தத்அசிஅதிநிஜ"மென்பது.

அவற்றுள்,—

I

துவம்பதமாவது:—(1) ஸ்தூலசரீரம், (2) சூக்ஷ்மசரீரம், (3) காரணசரீரம், (4) ஜீவன், (5) கூடஸ்தர், ஆகிய இந்த ஐந்தும் சேர்ந்தது. இந்த துவம்பதத்துக்கு லக்ஷியார்த்தம் கூடஸ்தர் அதன் வாச்சியார்த்தமானது வியஷ்டி. சரீரத்திரயங்களுக்கும் அபிமானியான ஜீவன். சரீரத்திரயங்களும் பதார்த்தமாம்.

II

தத்பதமாவது.—(1) விராட்டு, (2) இரண்யகருப்பம், (3) மாயை, (4) ஈசுவரன், (5) பிரஹ்மம் என ஐந்தும் சேர்ந்ததாம். இந்தத் தத்பத லக்ஷியார்த்தம் பிரஹ்மம்; அதன் வாச்சியார்த்தம் சமஷ்டி சரீரத்திரயங்களுக்கும் அபிமானியான ஈசுவரன். சமஷ்டி சரீரங்கள் மூன்றும் பதார்த்தமாம்.

(தோப்பில் மரந்தோன்றுவது சமஷ்டியில் வியஷ்டி. மரங்கள் தோப்பில் மறைவது வியஷ்டியில் சமஷ்டி.)

III

அசிபதமாவது:—(1) சத்து, (2) சித்து, (3) ஆனந்தம், (4) பரபிரஹ்மம், (5) சர்வசாக்ஷி என ஐந்தும் சேர்ந்ததாம். அசிபத லக்ஷியார்த்தம்: சர்வசாக்ஷி. அதன் வாச்சியார்த்தம்: காரணத் திரியங்களான சத்து, சித்து, ஆனந்தம் என்கிற மூன்று காரண உபாதிகளுக்கும் அபிமானியான பரப்ரஹ்மம். மூன்று காரண உபாதிகளும் பதார்த்தம்.

IV

அதிபதமாவது:—(1) சுத்தம், (2) சூன்யம், (3) சுபாவம், (4) ஒழிவு, (5) அதீதம் என ஐந்தும் சேர்ந்ததாம். அதிபத லக்ஷியார்த்தமாவது: அவாங் மனோ கோசரமாய், வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததாய், சாக்ஷாத்காரத்தினலே மட்டும் விளங்கக்கூடியதாய் கீழாலவஸ்தைகள் (ஜாக்ர, ஸ்வப்ன, சுஷுப்தி) மூன்றுக்கும் அப்பாலதாயுள்ள அதீதம். அதன் வாச்சியார்த்தம் காரணாதீதமான "சுத்தம், சூன்யம், சுபாவம்" எனும் மூன்று நித்தியதத்துவங்களுக்கும் அபிமானியான ஒழிவு. இதையே சாந்தோபசாந்தம் என்பாருமுளர். சுத்தம், சூன்யம், சுபாவம் என்றுள்ள ஸ்தூல சூக்ஷ்மகாரணமான நித்திய தத்துவங்கள் மூன்றும் பதார்த்தமாம்.

V

நிஜபதமாவது:—(1) யதார்த்தம், (2) இரகவியம், (3) அறுதி, (4) ஒடுக்கம், (5) மோனம் என ஐந்தும் சேர்ந்ததாம்.

நிஜபதலக்ஷியார்த்தம்: மோனம். அதன் வாச்சியார்த்தம்: ஆதியந்தமற்று நித்திய நிர்மல ஸ்வரூபமாய் விளங்கும், யதார்த்தம், இரகஸியம், அறுதி என்னும் அசரீராத்மகத் திரயங்களுக்கும் அபிமானியான ஒடுக்கம். (ஸ்ரீரங்கத்தில் அரங்கநாதர் தரிசனம் பெற்ருேர்க்கு இதுவிளங்கும்.) யதார்த்தம், இரகஸ்யம், அறுதி என்னும் மூன்று மஹாசக்திகளும் பதார்த்தமாம் (இவை பூதேவி, ஸ்ரீதேவி, நீளாதேவி இம்மூவரின் ஸ்வரூபாரூபங்களாம்.) இப்படியாக வுள்ள இருபத்தியைந்து அங்கங்களும் "அங்காங்க பஞ்சவுபக்கிரமப்படி" † ஒன்றிலொன்று ஐந்தைந்தாய் லயமாகிக் கடைசியில் எஞ்சிநின்ற நிஜஸ்வரூபமான யதார்த்தம், இரகஸியம், அறுதி, ஒடுக்கம், மோனம் என்னும் இவையே விதேஹமாய்க் கொண்ட பஞ்சாங்க

† பஞ்சபதங்களின் அங்கங்கள் ஒவ்வொன்றையும் வியஷ்டி, சமஷ்டி, காரணம், தத்துவம், விதேஹமென, ஸ்தூலத்தை விராட்டிலும், விராட்டைச் சத்திலும், சத்தைச் சுத்தத்திலும், சுத்தத்தை யதார்த்தத்திலுமாக இப்படியே அங்காங்க உபக்கிரமப்படி ஒன்றிலொன்ருெடுங்கச்செய்து நிஜபதமாத்திரமாய் எஞ்சி நிற்பது.

வேதியராய்ப் பரங்கருணை பூண்டவராய் ஐயாவாள் சகஜநிலையனுபவத்தி லிருந்தார்.

ஐயாவாள் இப்படி சகஜசமாதியிலிருந்து கிருதகிருத்திய நித்திய ஸ்வரூபியாய் விளங்க, ஊரிலுள்ள பிராமணர்களெல்லோரும் சேர்ந்து கொண்டு அவரை ஜாதியை விட்டுத்தள்ளிவைத்திருப்பதாக ஆர்ப்பாடஞ் செய்து, பிதுர்தினமான அன்றைக்கு யாரும் அவர் வீட்டிற் செய்யும் பிதுர்யஜ்ஞத்துக்குப் போகுதல் கூடாதென்று கட்டுப்பாடு செய்து கொண்டிருந்தார்கள். ஐயாவாள் வீட்டில் யாதொரு ஆர்ப்பாடமுமின்றி பிதுர்யஜ்ஞத்துக்கு வேண்டிய சமையல் காரியங்கள் தடையற நடந்தன. மணி 11 ஆயிற்று. பிராஹ்மணர்கள் யாரும் வரவில்லை. 12-ம் அடித்தது. உச்சிகாலமாகியும் யாரும் வரவில்லை. இதை யறிந்த ஐயாவாள் ஏதும் சொல்லாது மாத்தியாந்நிகஸ்நானத்துக்குச் சென்று, நித்தியகர்மங்களை முடித்துக் கொண்டு, அவ்வூரிலுள்ள பிள்ளையார் கோயிலுட் சென்று விக்நேசுவரரை வைசுவாநரராகவும், விஷ்ணு கோயிலில் சென்று விஷ்ணுவை மஹாவிஷ்ணுவாகவும் வந்திருக்கப் பணிந்தழைத்துப், பிதுர்தேவதைகளை நேரில் வந்து பூஜையேற்றுப் போசன முண்டு போகவேண்டுமென்று மந்திரோக்தமாய் ஆவாஹனம் செய்து அழைத்தார். அவர் நினைத்தபடியே, மூவரும் வந்து சேர பிதுர்யஜ்ஞமும் இனிது முடிந்தது. சாப்பாடானதும் பிதுர் தேவதைகளை உபசாரம் செய்து யதாஸ்தானத்துக் கனுப்பிவிட்டு, மஹாவிஷ்ணுவையும் மஹாகணபதியையும் தோத்திரஞ் செய்து வணங்கி திருக்கோயில் கொண்டருளலாமென்று விடைகொடுத் தனுப்பினர். ஊரிலுள்ள பிராமணர்களெல்லாரும் கண்கொட்டாது இவர் வீட்டில் யார் பிராம்மணர்த்தம் சாப்பிடுகிறார்கள் பார்க்க வேண்டுமென்று காணக்காத்திருந்தார்கள். இரண்டுமணியாதவும், கதவைத் திறந்துகொண்டு இரண்டு பிராம்மணர்கள் உள்ளிருந்து வெளியேறவே, எல்லாரும் அதிசயித்து அவர்கள் யாரென்று அறிய ஆவல் கொண்டு அவர்கள் பின்பற்றிச் செல்லலானார்கள். கோயிலண்டை சென்றதும் அவர்கள் அந்தர்த்தானமாய் விட, எல்லாரும் திகைத்து இதென்ன புதுமையென்று அதிசயித்தார்கள். ஆயினும் உள்மலம் நீங்காதவர்களானபடியினாலே, ஜலத்தை விட்டு ஒதுக்கப்பட்ட பாசியானது உடனே அந்த ஜலத்தை மூடிக்கொள்வதுபோல, அவர்களுடைய அஜ்ஞான விருத்தியானது ஈசுவர சாக்ஷாத்காரம் பெற்ற அவர்கள் உளக்கண்ணை யுடனேமறைத்துக் 'கண்டதுகனவெனக் கொண்டவர்மனத்தை' மலத்திலாழ்த்தியது. எல்லாரும் பின்னர்கூட்டங்கூடி ஐயாவாள் சண்டாளனுக் கன்ன மிட்டமையால் காசியாத்திரை சென்று கங்காஸ்நானம் செய்தாலன்றி அந்தத் தோஷம் நீங்காதென்று வர்ஜித்தார்கள். ஐயாவாள் அதற்கு முடன்பட்டு கங்கா ஸ்நானம் செய்வதாக ஒப்புக்கொண்டார். அவர் பரம ஏழையாதலால் அவருக்கு ஸ்தூலத்தில் காசியாத்திரை செய்வதற்கான சாதனங்கள் எளிதில் ஏற்படவில்லை. ஆகையால் கங்காதேவியைத் தோத்திரஞ்செய்து தனக்கு அவளுடைய கடாட்சம் வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். உடனே அவருடைய கிரஹத்தின் புறக்கடையிலிருந்த கிணற்றில் கங்காதேவி அந்தர்வாஹினியாய்த் தோன்றி ஜலம் குமிழியிட்டுக் கொண்டு கிளம்ப, ஊரெல்லாம் ஜலப்பிரளயமாகி விட்டது. அருட்கண் இல்லாத அந்தணர் குலத்தோர் தங்கள் மருட்கண்ணால், ஊர் முழுகிப்போவதை யுணர்ந்து, ஐயாவாளை வணங்கி, அவருடைய மஹிமை விளங்கிற்றென்று ஒப்புக்கொண்டு, கங்காதேவியை அந்தர்வாஹினியாகத்தானே யதாஸ்தானம் போகும்படி பிரார்த்தித்தருள வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, அவரும் அப்படியே செய்ய வெள்ளம் குறைந்து பிரவாகம் அடங்கிற்று. இப்படிப்பட்ட அந்தண சிரேஷ்டரான மஹான் வசித்த அந்த ஊரில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்றொரு பெரிய குடித்தனக்காரர் இருந்தார்.

ஓம் தத்ஸத்.

———(:o:)———

## Easy Lessons in Economics.

### குடிவாழ்க்கை.

### V பாடம். II-ம், பாகம்.

### வேலையின் பயன்.

—:-:—

செல்வமொன்றே நாம் தேடவேண்டு மென்பது நமது கருத்தன்று. இவ்வியாசத்தில் செல்வந்தேட வழியை மாத்திரமே நாம் கவனிக்கிறபடியால் பரலோகத்தை நாடி நாம் செய்யவேண்டிய காரியங்களை இவ்விடத்தில் விவகரிப்பது அவசியமாகத் தோன்ற வில்லை. நிரந்தரமான மோக்ஷலாபத்தை நாடி, யதன் பொருட்டு திரவியச் செலவிட்டு, இம்மையில் வருத்தத்திற் குள்ளாகி மனம் சென்ற மார்க்கத்தி லுழன்று இவ்விக சுகங்களை அற்பமென மறக்கலாம். ஆயினும் இவ்வுலகத்தில் மனிதனுக்கு இன்பத்தைத் தரும் சாதனங்களின் விருத்திக் கிரமங்களைக் காட்ட முயலுகிறோமாகையால் அவ்வின்பத்தை யடைவதற்குரிய அநுகூலங்கள் குறைந்து பயன்படாமற் போகும் காரணங்களை யெல்லாம் எடுத்துக் கூறுதல் நமது கடமை யாகும்.

வேலையால் அமையும் பொருள்களெல்லாம் செல்வமே யாயினும், அவைகளினும் சிற்சில, செல்வ விருத்திக்கு உபயோகப்பட மாட்டாது. சிரமத்தினால் உண்டாக்கப்படுகிற ஒவ்வொன்றும் தேசத்தின் செல்வத்தை வரவரப் பெருகச் செய்யும் குணமுடையதென்று எண்ண நியாயமில்லை. மனிதனுக்கு உணவும், ஆடையும், குடியிருக்க வீடும் இன்றியமையாச் சாதனங்கள். உணவு தேகவலிமைக்கும் சுகத்துக்கும் வேண்டுமளவு இருந்தாலொழிய வேலை சரிவர நடக்க மாட்டாது. ஆயினும் நாம் உண்ணும் பொழுது தேக சௌக்கிய மொன்றையே கவனித்து உணவை ஆராய்ந்தெடுப்பதில்லை. நாவினுணர்ச்சிக்குத் தக்கபடிக்கும் நம்முடைய வழக்கத்திற் கிசைந்த படிக்கும் உணவைத் தேடுகின்றோம். வாசனைக்காகவும் ருசிக்காகவும் நம்முணவில் சேர்க்கப்படும் பல பதார்த்தங்களை நீக்குவதினால் சரீர சௌக்கியம் குன்றாது. புகையிலையின் உபயோகம் சுகத்திற்குப் பிரதானமென்றாவது அவசிய மென்றாவது சொல்லவிடமில்லை. பலவகை விலையுயர்ந்த சாராயங்கள் செல்வநஷ்டத்திற்கு இடங் கொடுக்கின்றன. காப்பீ, டீ, கோக்கோ முதலிய பானங்கள் அவசியமானதென்று சொல்ல முடியவில்லை.

இப்படியே ஆடையைப்பற்றி யுன்னும் பொழுது, நாம் வெயில், குளிர் முதலியவைகளை யுத்தேசித்தே ஆடையை நாடுவதில்லை. உயர்ந்த நெசவும், பட்டும், சரிகையும் மெய் வலிமைக்கும், ஆரோக்கியத்திற்கும், அவசியமானதன்று.

மனிதர்களை மூன்று வகுப்பினராகப் பிரிக்கலாம். மனிதருடைய ஜீவனத்திற்கு இன்றியமையாத சாதனங்களைச்செய்யும் தொழிலாளிகள் முதல் வகுப்பினர். மனிதர்களின் ஜீவனத்திற்கு அநுவசியமாயிருந்தும் சுகத்தைக் கருதி உபயோகிக்கப்படும் சாதனங்களைச் செய்யும் தொழிலாளிகள் இரண்டாம் வகுப்பினர். பிறர் செய்து முடிக்கும் சாதனங்களின் பயனை யனுபவித்தலிலும், ஊணுறக்கத்திலும் தமது ஆயுளைச் செலவிடுவோரே மூன்றாம் வகுப்பினர். தொழிலின்றிச் சுகவாசஞ் செய்வோரும், பிறர் செல்வத்தைக் களவாண்டு ஜீவிப்போரும் மற்றும் பலரும் இந்த வகுப்பில் சேர்ந்தவரே யாவர்.

மேற்கண்ட மூன்று வகுப்பினரில் முதல் வகுப்பினருடைய ஜீவனத்தினிமித்தம் செலவாகும் பொருளே, தேசத்திலுள்ளோரனைவருடைய ஜீவனத்துக்கும் இன்றியமையாச் செலவாகும்.

அந்த முதல் தரத்து வேலைக்காரர்கள் திட சரீரத்துடன் ஜீவித்திருந்து வேலையைக் குறைவன்றி நடத்துவாராயின், மற்றையோரனைவருக்கும் வேண்டிய முக்கியமான சாதனங்களில் குறைவுண்டாகாது. ஆனால் அம்முதல்வகுப்பினரும், தங்கள் உயிரையும் தேக வலிமையையும் வேலைத்திறமையையும் காக்க வேண்டிய அளவுக்கு மிஞ்சி சுகத்தைக்கருதி பல பொருள்களை இச்சிக்கலாம். இரண்டாம் வகுப்பினர் செய்யும் வேலையின் பயனாகும் சகல வஸ்துக்களும் இன்றியமையாதவைகளன்று. பல தட்டு முட்டு சாமான்கள், வாகன வகைகள், சரிகை பட்டு முதலிய பல ஆடைக்குதவும் பொருள்கள், வாசனாதிரவியங்கள், சாராயவகைகள் இவைபோன்ற பல சாதனங்கள் சுகமொன்றையே நாடி உற்பத்தி செய்யப்படுகின்றன. இவைகள் உயிரைக் காப்பாற்ற அவசியமானவையல்ல. இத்தனை தொழிலாளிகளுடைய வேலையின் பயனாகிய பொருள் சுகமொன்றுக்கே உதவுவதைப் பார்த்து நாம் துக்கப்படக் காரணமில்லை.

நம்முடைய தேசத்தில் பெரும்பான்மையோர் ஜீவனமார்க்கத்தைத் தேடுந் தொழிலொன்றையே செய்து வருகின்றனர். இந்துக்களில் மூன்றிலிரண்டு பாகத்தோர் பயிரிட்டுக் காலங் கழிக்கின்றனர். பாக்கிநிற்கும் மூன்றிலொரு பாகத்தினர் உணவு போன்றவையல்லாத சாதனங்களைச் செய்வதிலும், மற்றுமுள்ள தொழில்களிலும் ஏற்பட்டிருக்கின்றனர். பயிரிடுவோர்களுக்கு தங்கள் உணவுக்கு வேண்டுமளவுகூட கிடைக்கிறதில்லை. பயிரிடவேண்டிய உதவிகளுக்காகவும், வரிகளுக்காகவும், தங்கள் வேலையின் வரும்படியிலிருந்து கொடுப்பது போக எஞ்சி நிற்பதே பயிரிடுவோனுக்கு வருஷத்திற்கு உயிரைக் காப்பாற்றுதலொன்றுக்குங் கூடப் போதாததாக விருக்கின்றது. ஆகையால் எப்பொழுதாவது காலவித்தியாசங்களினால் நிலத்தில் வழக்கம்போல் விளையாது வரும்படி குறைவு படுமானால் அவனுணவின்றித் தவிக்கின்றான். இதற்கு இவ்விடத்தில் நேரும் பஞ்சமே நிதரிசனம்.

இங்கிலாண்டு போன்ற தேசங்களிலுள்ள ஜனங்களுடைய ஸ்திதி இவ்விதமன்று. அவ்விடத்திலுள்ள வேலைக்காரர்களுக்கு உணவுக்குவேண்டிய அளவுக்குமேல் வரும்படியுண்டு. அவ்வரும்படியில் சிலபாகத்தை யவர்கள் மிகுத்து வைப்பதுமுண்டு. சிலபாகத்தை அப்போதைக் கப்போது சுகத்தை நாடிய பொருள்களில் செலவிடுவார்கள். வரும்படி முழுமையும் செலவிட்டு மீதி வைக்காமலிருந்தாலும், உணவுப் பொருள்களின் விலையேற்ற காலத்தில் அதற்குத் தகுந்த கூலியை, தொழிலை நடத்துகிறவன் கொடுக்க கட்டாயப்படுத்தப் படுகிறான். அன்றியும் சுகத்தை நாடிய பொருள்களின் பொருட்டு செலவிடப்படுவதை நிறுத்துவாராயின் உணவுக்கு சிரமமின்றி ஜீவிக்கலாம்.

தவிர நம்முடைய தேசத்தைப்போல் அவ்விடங்களில் ஜனங்கள் பெரும்பான்மையோர் உழுது பயிர் செய்கிறவர்களல்ல. கைத்தொழில்களினால் ஜீவிக்கிறவர்களே யதிகம். தேசத்தின் செல்வம் சுக விஷயங்களில் அதிகமாக செலவிடப்படுகிறது. அங்கிருக்கும் செல்வவான்கள் வாகனாதிகளிலும், சங்கீதத்திலும் நாடகத்திலும் செலவிடுவது ஏராளமாகும். ஆகையால் சமயம் நேர்ந்தபொழுது இவ்விதச் செலவை சற்று சுருக்குவாராயின் அத்தேசத்தார் சேகரிக்கக் கூடிய செல்வத்திற்கு அளவில்லை. பிரதேசங்களுடன் யுத்தங்களுண்டானாலும், திரவியச் செலவு மிகுதியாய் வேண்டியிருக்கும்படியான எவ்வித காரியம் சம்பவித்தாலும், அச்சமயங்களில் அவர்கள் தங்களுக்கு அவசியமாயுள்ள சுகங்கள் யாதொன்றையும் கைவிடாமலே வேண்டிய தொகையை வேண்டிய காலத்தில் சேகரித்து காரியங்களை நிறைவேற்றுகிறார்கள். ஆகையால் நமக்கு அவசியமான ஒவ்வொரு பொருளையும் நம் தேசத்திலேயே செய்து முடிக்கவல்ல தொழிலாளிகளும், பெருந் தொழில்களை வைத்து நடத்தக்கூடிய தனிகர்களும் பெருகவேண்டும்.

T. C. வெங்கடரமணய்யர்.

# JUBILEE-THANKSGIVINGS.
## Silent Prayers for Simple Blessings

### பஞ்சவிம்சதி பாக்கியப்பேறு.
போற்றி போற்றி!—மௌனகுருவாழ்த்து.

"..................and only to desire
The purity of Yôg is to pass
Beyond the *Sabdabrahm*, the spoken Vêd.
* * * * *
* * Such an one ranks
Above ascetics, higher than the wise,
Beyond achievers of vast deeds! Be thou
Yôgi Arjuna! And of such believe,
Truest and best is he who worships ME
With inmost soul stayed on MY MYSTERY."
—*Bhagavad Gita.*

"மச்சித்த: ஸர்வதுர்காணி மத்பரஸாதாத் தரிஷ்யஸி."-கீதை

"என்னிடத்திலேயே மனதையுடைய் நீ என்னுடைய அனுக்கிரஹத்தால் எல்லாத் துக்கங்களையும் அதிக்கிரமிப்பாய்."—பகவான் வாக்கு.

"அனேக வர்ணங்களுள்ள பசுக்களானாலும் அவைகளின் பால் ஒரு வர்ணமுள்ளது. ஞானமானது பால்போல காணப்படுகிறது. லிங்கங்களோ (ரூபங்களோ) பசுக்கள்போலிருக்கின்றன. (பாலில் நெய்போல ஞானம் வியாபித்திருக்கிறது.) ஞானக் கண்பெற்று நிஷ்களம், நிச்சலம், சாந்தமீ இப்படியாயிருக்கிற மஹத்தான். பரமபதமாகிற ப்ரஹ்மம் 'நானே' யென்று ஸ்மரிக்கவேண்டும்."—திரிபுராதாபிநீயுபநிஷத்.

"விவேகசிந்தாமணிப்பத்திராதிபர் நீடூழிவாழ்க"
வென்ற
விடுகதை வினு வியற்றிய
### மௌனகுருவாக்குத்துதி.

(1) மௌனகுரு வென்று சொல்வர்
மனமொடுங்கப் பெற்றவரை:
மௌனமாநல் தேசிகனே
மனமொடுங்கக் காட்டவல்லன்!
மௌனகுரு வாய்திறந்தால்
ருத்திரமூர்த்தி தரிசனமாம்
மௌனகுரு வாழ்த்தப்பெற்றால்
சித்திரமும் ருத்திரமாம்!

(2) ருத்திரமாம் மௌனகுரு
சித்திரமாம் முத்திரையால்
எத்திரமாம் இடையூறும்
இல்லையுனக் கென்றேசொல்லிப்
பத்திரமாய்ப் பதினாறு
பதங்களையு மொன்றுசேர்த்துச் (1)
சித்திரமாம் நடுவெழுத்தைச் (2)
சூத்திரமாயக் கோத்தெடுத்தான்! (3)

சி (1) அறிஞர் முதல் திதி யீறாகக்கூறியுள்ள பதினாறு பதங்களும் அவற்றின் பேர்கொடுக்கப் பட்டிருப்பதின் நடுவெழுத்தை பீஜாக்ஷரமாகக் கொண்டு யோகஸம்யமத்தில் லக்ஷியார்த்தம் செய்து பார்த்தால் "தயவுநிறை ஷோடசாக்ஷரீ" யென்று துதிக்கலான ஸ்ரீ தேவியின் பதினாறு கலைகளாக மாறியொலிக்கும்.

வ (2) 'ப்' என்று நடுவில் வந்த சந்தி யெழுத்தை 'கிண்கிணி' யென்கிற நாதவொலி 'கப்' 'கப்' பென்றொடுங்கும் ஒடுக்கத்தின் குப்த வித்தியா சித்திரமாக வைத்துப் பார்த்தால் அதில் ஷோடசியின் நடுவெழுத்தின் அதிஷ்டானமான 'ஸ்மார' என்னும் அதிதேவதை பிரசன்னமாகும். ஸ்மரணத்தில் (தியானத்தில்) மிகவு முயர்ந்தது 'நாதானுசந்தானம்' என்றுணர்க.

ய (3) "விவேகசிந்தாமணிப்பத்திராதிபர்" என்பதீன்ற 16-பெயர்களின், பொது லக்ஷண லக்ஷியங்களைக் "குக்குடாயமநம:" என்று சிந்தையொடுங்கச் சேர்த்துக் கோத்துப் பார்க்கவொரு(பிரஹ்ம)சூத்திரம் பிறக்கும். அது:—

வ (4) வாமத்திலுள்ள பதங்களை லக்ஷியார்த்தம் பொருந்தச் சூத்திரமாய்க் கோத்திடில், 16-பதங்களின் லக்ஷியப் பொருள்களும் நாலுபாத [பாதம்] மாகிப் பின்வருமாறு அமையும்.—

1—"அறிஞர் சிவவேடந்தமிழ் நிகண்டழகு
2—"நீர்ப்புள் கங்கை அரசுகிருபை(யொக்குமால்)
3—"வளர்(மதிமுகத்) தைரியதேவி மிருது(வொளி காண்பர்)
4—"முருகன்வாழ்தலம் ஆகமம் அகத்தியன் திதியி வற்றினில்).

இது சகுண சாக்ஷாத்காரலக்ஷணலக்ஷியமாம்.

(3) கோத்தெடுத்தான் நடுவெழுத்தைச்
சூத்திரமாய்த் தொடுத்திடென்றுன் (4)
கோத்தெடுக்கும் குணங்குறியால்
பின்னுமாறு பதங்கள்சேர்த்தான்.(5)
கோத்தெடுத்த பதினுறெடு
பின்னுறின் நடுவெழுத்தைக்
கோத்தெடுத்துக் கும்பிடென்றுன்
விவேகசிந்தா மணியவனே!

(4) விவேகசிந்தா மணியவனே
வீரியனே வாழ்கவென்றுன்;
"விவேகசிந்தாமணிப்பத்திராதிபர்
நீடூம்வாழ்க" வுலகிலென்றுன்;
விவேகசிந்தா மணியேயான
வேதியனும் மனங்குளிர்ந்தான்;
விவேகசிந்தாமணியவனே வேலவனே ருத்
[திரமூர்த்தி!
பழனியில்வாழ்புண்ணியனே! பாவலனே
போற்றிபோற்றி!

| | |
|---|---|
| வசந்த | பஞ்சவிம்சதி பாக்கியம்பெற்ற |
| பௌர்ணமி | விவேகசிந்தாமணிப்பத்திராதிபர். |

(4)57வது பக்கத்தின் அடியில் 4-வது குறிப்புப் பார்க்க.

சி (5) பின்னுமாறு பதங்கள் சேர்த்தது நித்தியவாழ்வைக்குறிக்கும் நிர்க்குண சாக்ஷாத்கார சாம்பிராஜ்யத்தின் பொருட்டு.—சகுணோபாசனையில் தேறினவனுக்கு "வேத உபநிடதங்(கள்) குறித்தல் மிக்க (அதீதமான) தலம், மாலை, இன்பம், (சுத்த)ஸப்தத்வீபம் (ஆகிய இவைகளாம். இவை முறையே அதிபத லக்ஷியமாம் (வாசனுதீத)சூத்தம், (சங்கல்ப விகல்ல) சூந்நியம், (ஆனந்த)சுபாவம், கிருதகிருத்தியத்துவம் அல்லது (வினை)ஒழிவு எனும் இவைகளைக் குறிக்கும். இவைகாரணுதீத மானபடியால் அதிபத லக்ஷியங்களாம். இவற்ருேடு "புளகிதமாய்ச் சொல்வதற் கைந்தெழுத்துப்பேர்" சிவயவசி யென்பதைக்கூட்ட சுத்தமுத்த நித்தமாம் வாழ்வு சித்திக்கும்.

## *முன்னதிலிருந்துண்டான பின்னுமொரு விடுகதை வினு.

* [46-வது பக்கத்தின் வாமபாகத்திலுள்ள பத்தியின் பதங்களை யொன்றுசேர்த்து மற்றொரு பத்தியிலுள்ள நடுவெழுத்திலிருந்துண்டான "விவேகசிந்தாமணிப்பத்திராதிபர்"—யார்? என்றும், "நீடூம்வாழ்க"—எப்படி? யென்றும் எழும்வினுவிற்கு சூத்திரரூபமாகவந்த விடையுமளிக்கப்பட்டிருக்கிறது.]

(5) விவேகசிந்தாமணிப்பத்திராதிபர்"—யார்?

இதற்கு விடை:—

சூத்திரம்.

"அறிஞர் சிவவேடந் தமிழ்நிகண் டழகு
நீர்ப்புள் கங்கை யாசுகிருபை (யொக்குமால்)
வளர்மதி(முகத் தைரிய)தேவி மிருது(வொளி
காண்பர்)
முருகன்வாழ்தலம் ஆகமம் அகத்தியம் திதி
(யிவற்றினில்)."

(6) வினு: "நீடூம் வாழ்க."—எப்படி?

சூத்திரம்: 'உபநிடதங்குறி தலமாலை யின்பம்
சுத்தஸப்த த்வீபம் சிவயவசி."

—:-:—

## WHAT SHALL WE TALK ABOUT?

### Sitha-Manonmani

2. A Dialogue on Tiger.

—(:-:)—

### சீதா—மனோன்மணி

2. புலியைப்பற்றிய ஓர் சம்பாஷணை.

—(:-:)—

மனோன்மணி:—சீதா! சின்னுளுக்கு முன்னர் நாம் பூனையைப்பற்றிச் சம்பாஷித்தோமே ஞாபகமிருக்கிறதா?

சீதா:—ஆஹா! நன்கு ஞாபகமிருக்கிறது. அதைப்பற்றி நீ இப்பொழுது எதற்காகக் கேட்கிறுய்?

மனோன்மணி:—இப்பொழுது வெயில் தாழ்ந்து இனிமையாய்த் தென்றல் வீசுதலால் நாம் உத்தியானவனத்தில் கூடாரம்போல் விழுதினுல் பாவியிருக்கும்

ஆலமரத்தடியில் உட்கார்ந்து சற்றுநேரம் காற்றுவாங் குகையில் உபயோகமாய் எதையாகிலும் பற்றிப் பேசிக்கொண் டிருக்கலாமென்றுதான் கேள்விகேட் டேன். நின் அபிப்பிராயமென்ன?

சீதா:—எனக் கப்படிச் செய்வதில் யாதொரு ஆக்ஷேபனையு மில்லை. ஆனால் புறப்படுமுன் எதைப் பற்றிப் பேசுவோ மென்று தீர்மானித்துக்கொண்டு போவோமே!

மனோன்மணி:—நாம் அன்று பூனையைப் பற்றி ஆராய்ச்சி செய்திருத்தலால், இன்று அதன் வர்க்கத் தைச் சேர்ந்த புலி சிங்க மிரண்டில் புலியைப் பற்றித் தெரிந்துகொள்வோமே!

சீதா:—சரி! எனக்கும் அது சம்மதமே! நீ இப் பொழுது உட்சென்று, தரையிற் போட்டு உட்கார எதாவது கொண்டு வா செல்வோம்!

மனோன்மணி:—நான் முன்னரே, கருணாலயத்தை இரண்டு புலித்தோல்கள் அவ்விடம் கொண்டுபோய்ப் போடச் செய்திருக்கிறேன். நீ வா, நாம் போகலா மென: இருவரும் சென்று, ரத்தின கம்பளம் விரித் தாற்போலவிருக்கும் பசும் புற்றரையில் விரித்துள்ள புலித்தோலில் உட்காருகிறார்கள்.

சீதா:—புலி சாதாரணமாய்க் காணப்படும் தேச மெது சொல்வாயா?

மனோன்மணி:—இக்கம்பீரமான பிராணி, ஆசியா கண்டத்திலும், இந்தியாவிலுள்ள காடுகளிலும் சாதா ரணமாய்க் காணப்படுவதாய்க் கேள்வியுற்றிருக்கி றேன்.

சீதா:—புலிக்கும், சிங்கத்திற்கு முள்ள பேதா பேதத்தைத் தெரிந்துகொள்ளப் பிரியப் படுகிறேன்.

மனோன்மணி:—விரித் துரைக்கக் கேட்பாயாக. புலியின் உயரம் மூன்று முதல் நான்கு அடிவரை யுள்ளதாயும், அதன் நீளம் சுமார் எட்டு அடி யுள்ள தாயும் கூறப்பட்டிருக்கிறது. சிங்கத்தின் உயர நீள மும் அவ்வளவேயாம். ஆனால் சிங்கத்திற்குள்ள பிடரி மயிர் புலிக்கிராததால், அதற்குப் பிரதியாக புலி சிவ ந்த மஞ்சள் வர்ணமுள்ள மயிரடர்ந்த தோலில் கறு த்த வரைகளுள்ளது. தவிர அதன் வயிற்றின் அடிப் புறம் துல்லிய வெண்மைநிற முள்ளது.

சீதா:—புலி எவ்வாறு வேட்டையாடப் படுவதென் பது தெரிந்திருக்கின் உரைப்பாயாக.

மனோன்மணி:—புலிவேட்டை இந்தியாவில் முக் கிய ஆனந்தத்தை விளைவிக்கும் விளையாட்டு. அநேக வேடுவர்கள் ஒருங்கு கூடி, வேட்டைக் கென்றே பழக்கப் பட்டிருக்கும் யானைகளின் மீது ஏறிச் சென்று வேட்டை யாடுவார்கள். யானையின் மீதுள்ள அம்பாரியில் துப்பாக்கிகள் தயாராய் கெட்டித்து வைக்கப் பட்டிருக்கும். மலையர்களால் புலியிருக்கு மிடம் காட்டப்பட்டு அவர்கள் அவ்விடம் சென்றதும், ஏழெட்டு அடி உயரமுள்ள புற்களால் அடர்ந்த காட் டில் மறைந்து கிடக்கும் அது விரட்டப்பட்ட வுடன், புற்களுக்குள் மறைந்து சென்றே அது தப் பித்துக்கொள்ள முயலும். ஆனால் அது அவ்வாறு ஊர்ந்து செல்வதினாலேயே அசைக்கப் பட்டுள்ள இலைகளினின்றும், அதனிருப்பிடம் தெரிவிக்கப்படு கிறது. அவ்வாறு அதன் இருப்பிடம் தெரிந்ததும், யானையின் மீதுள்ளவர்களில் ஒருவன் அதை நோக் கிச் சுடுவான். தான் தப்பித்துக்கொள்ளல் இயலா தென்று அது தெரிந்து கொண்டதும், அது திரும்பி யானையின் மீதேறி அம்பாரிக்குள் இருப்பவர்களை எதிர்க்க முயலுமாம். அப்பொழுது அனேகம் யானை கள் பயந்து வீறிட்டோடுவதால் அதன் மேலிருப்ப வர்களுக்கு அதிக அபாயமுண்டாவது திண்ணம். யானை அவ்வாறு ஓடாமல் சற்றுநேரம் தைரியமாய் நிற்கின் புலி சீக்கிரம் சுட்டுக்கொன்றுவிடப்படும்.

சீதா:—புலிகள் மேற்கூறியவாறில்லாமல் கொல் லப் படுவதில்லையோ?

மனோன்மணி:—இல்லாமலென்ன! ஜனங்கள் ஆழ் ந்த குழிகள் வெட்டி அக்குழிகளில் அடியில் கூர்மை யான மூங்கில் பிளாச்சுக்களை நட்டு வைப்பார்கள். புலிகள் அக்குழிகளில் விழுவதால், நன்கு குத்துண்டு மடிகின்றனவாம்.

சீதா:—புலிகள் பழக்கப்படுவன அல்ல வென்கிறார் களே அது வாஸ்தவமா?

மனோன்மணி:—புலிகள் பழக்கப்படுகிறதில்லை என்பது தப்பிதமான அபிப்பிராயம். அவைகள் சாதாரணமாய்ப் பழக்கப்படும் பிராணிகள் தாம். ஆயினும், எல்லா துஷ்ட மிருகங்களையும் போல இதுவும் கோபமூட்டப்படின், தன் இயற்கை மூர்க்க சுபாவத்தைக் காட்டுவதால் அஜாக்கிரதையா யிரா விடின் ஆபத்துண்டாகலாம்.

சீதா:—அன்று நம் உபாத்தினி அம்மணி ஓர் ஊரில் இருந்த ஓர் சிங்கத்திற்கும், பெண் புலிக்கும்

பிறந்த குட்டிகள் மூன்றிருந்ததாகச் சொன்னார்களே, ஞாபகமிருக்கிறதா?

மனோன்மணி:—ஆஹா! இருக்கிறது. அக்குட்டிகள் சிங்கக் குட்டிகளைப் போலிருக்க வில்லை யென்றும், ஆனால் புலிக்குட்டிகளைவிட அவைகளின் மீதுள்ள வரைகள் ஆழ்ந்த நிறமுள்ளவைகளாயும், மயிர்களின் நிறம் அதிக பிரகாசமாயு மிருந்ததாகவும் கூடச்சொன்னார்கள்.

சீதா:—புலியின் நிறமும், அதன்மீதுள்ள வரைகளும், அதற்கேதாவது உபயோக முள்ளதாமோ?

மனோன்மணி:—ஆஹா! ஜந்துக்களின் நிறமும், அவைகளின் மீதிலுள்ள பொட்டுகள் கோடுகள், வரைகள் முதலியவைகளும், அவைகளை அபாயத்தினின்றும் கார்க்க அனுகூல மென்பதற்கு ஓர் இன்றியமையாத உதாரணம். நீ கேட்ட கேள்விக்குப் பதிலினின்று நன்கு விளங்கும்.

சீதா:—புலியின் நிறமும், அதன் மீதுள்ள வரைகளும், எவ்வாறு, எவ்விதமாய் உதவுகின்றனவென்பதைத் தெரிவி பார்ப்போம்.

மனோன்மணி:—புலி விசேஷமாய் புற்களின் மத்தியில் கிடப்பதாய் முன்னமே சொன்னோமல்லா! புலியின் நிறம் அப்புற்களின் நிறத்தை ஒத்திருத்தலாலும், அதன் மீதுள்ள வரைகள் புற்களை ஒத்திருத்தலாலும், ஆழ்ந்து நோக்கப்பட்டா லொழிய அதிருப்பது தெரியமாட்டாது. ஆதலால் தான் மான் முதலிய பிராணிகள், அதன் சமீபத்தில் பயமின்றிவந்து அதற் கிரையாவதுடன், வேட்டைக்காரர்கள் முதலானவர்களுக்கு அதிருப்பது தெரிந்து கொள்ளல் முடியாததாகின்றது.

சீதா:—அப்படியா! நீ சொன்னதினின்றும், நம் தோட்டத்தில், பூச்சி புழுக்கள் இலையோடிலையாய் மறைந்திருக்கும்படியான நிறத்துடன் கூடியிருத்தலும், மரத்தின் மேலிருப்பவைகள், பட்டையோவென்று நினைக்கும்படியான தோற்றத்தோடு கூடியிருத்தலும், இன்னம் சிற்சில, ஏதோ செடிகொடிகளின் மீதுள்ள புஷ்பங்களோ என்று நினைக்கும்படியாயிருத்தலும், அவைகளைப் பிடித்துத் தின்னும்படியான ஜந்துக்களுக்கு அவைகளிருப்பது எளிதில் தெரியாமலிருக்க ஈசுவரனால் ஏற்பட்டிருக்கிறதென்று தோன்றுகிறது. அல்லவா?

மனோன்மணி:—ஆம்! ஈசுவர சிருஷ்டியில் ஒன்றும் காரணமில்லாமல் உண்டாக்கப் பட்டிருப்பதில்லை. புஷ்பங்களின் நிறமும், அவைகளுள் அமைக்கப்பட்டிருக்கும் தேனும், காரணமின்றி ஏற்படுகின்றனவென்று நினைக்கிறாய்?

சீதா:—ஏதாவது விசேஷமான காரண மிருந்தால் தெரிவிப்பாயா? அவைகள் அவ்வாறு ஏற்பட்டிருத்தல் மனிதர்களின் உபயோகத்திற்கென்பது அநேகரது அபிப்பிராயம்.

மனோன்மணி:— அப்பேர்ப்பட்ட அபிப்பிராயம் தப்பானதே. புஷ்பங்களின் நிறமும், அதற்குள்ளிருக்கும் தேனும் செடிகொடிகள் நசித்துப் போகாமல் வித்துக்கள் உண்டாகி விருத்தி ஆகும் நிமித்தம் ஏற்பட்டிருப்பன.

சீதா:—நீ சொல்வது எனக்குச் சற்றும் தெரியவில்லை. விவரித்துக் கூறுவாயாக.

மனோன்மணி:—கூறக்கேண்மின்; புஷ்பங்களின் வர்ணம், தூரத்திலுள்ள வண்டுகளைக் கவரவும், உள்ளே யிருக்கும் தேன் அவ்வண்டுகளைப் புஷ்பங்களுக்குள் புகச் செய்யவும் ஏற்பட்டிருக்கின்றன.

சீதா:—வண்டுகள் புஷ்பங்களுள் புகுவது வித்துக்களை உண்டாக்குவதெப்படி புலப்படவில்லையே!

மனோன்மணி:—தெளியச் சொல்கிறேன் கேள். புஷ்பங்களுக்குள் மகரந்தப் பொடிகளிருப்பது தெரியுமா உனக்கு?

சீதா:—தெரியும். அதனாலென்ன?

மனோன்மணி:—இம்மகரந்த ரேணுக்களில் ஆண் ரேணுக்களென்றும், பெண்ரேணுக்கள் என்றும் ஏற்பட்டிருக்கின்றன. வண்டு ஒரு புஷ்பத்தில் புகுந்து தேனை உட்கொள்ளும் பொழுது, அப் புஷ்பத்திலுள்ள, மகரந்தப் பொடிகளிற் சில அதன் தலையில் ஒட்டிக்கொள்ளும். பிறகு அது மற்றொரு புஷ்பத்தினுள் புகும் பொழுது, அதன் தலைமீதுள்ள ஆண் பெண்ரேணுக்கள் அப்புஷ்பத்திலுள்ள பெண், ஆண் ரேணுக்களுடன் உரைவதால் சிறுவித்துக்களுண்டாகி, அவ்வித்துக்கள் முற்றிப் பக்குவமாகின்றன.

சீதா:—என்ன ஆச்சரியம்; இவ்விஷயம் எனக்கிது சாறும் தெரியாது. தவிர பெரும்பாலோர்களுக்கும் தெரிந்திராதென்றே நினைக்கிறேன். இது நிற்க, புலிவர்க்கத்தைச் சேர்ந்த பிராணிகள் வேறு யாதேனு முளதாமோ?

மனோன்மணி:—புலி ஜாதியிலேயே இன்னம் மூன்றுவித முண்டு. ஒன்று, ஆப்பிரிக்கா இந்தியா, ஜாவா முதலான விடங்களில் காணப்படும் சிவிங்கி என்றது. அதன் தோல் நீ உட்கார்ந்திருக்கும் தோலைப்போல் புள்ளிகளோடு கூடி யிருக்கும். அது சுமார் இரண்டடி உயர முள்ளது. இதுவும், அமெரிக்காவில் காணப்படும் மேற்கூறிய புள்ளிகளைப்போலிராமல் சற்று மாறி யிருக்கும் புள்ளிகளுடன் கூடின ஜாகுவர் என்ற ஓர்வித சிறுத்தையும், மரமேறி கிளைக்குக் கிளை தாவி குரங்குகள் முதலியவைகளையும் பிடித்துத் தின்று ஜீவிக்கும் புலிவர்க்கத்தைச் சேர்ந்த பிராணிகள். தவிர மேற்கூறிய ஜாகுவர் என்ற மிருகம், ஆடுகளை நாசம் செய்வதுடன், அதிக ஆழமில்லாத ஜலத்தில் இறங்கி, தனது பாதத்தினால் அடித்திரைத்துக் கரையேறிய மீன்களைத் தின்பதையும் பார்த்திருக்கிறார்கள்.

மனோன்மணி:—அப்படியா! சரி, ஏதோ மூன்றாவதொரு ஜாதி இருப்பதாய்ச் சொன்னாயே அதெது?

சீதா:—அமெரிக்காவில் காணப்படும் பூமா என்ற பெயருடன் கூடிய பிங்களநிற ஜாதி மிருகம் ஒன்றுளதாகக் கேள்வி. இப்பிராணியைக் கண்டால் அத்தேசத்தார்க்கு மிக்க திகிலாம்! சரி நேரமாகிறது: சூரியாஸ்த மனமாகி, வெகு நேரமாய்விட்டதால் உட்செல்வோம்.

மனோன்மணி:—சரி! அவ்வாறே செய்து, நாளை சாயந்திரம் கூடுமானால் சிங்கத்தைப்பற்றி சம்பாஷிப்போம் என்று சொல்லி இருவரும் செல்கிறார்கள்.

எம் என் கணேசய்யர்.

——(:o:)——

# Sita-A Tale of Hindu Domestic Life

## சீதா அல்லது இல்லறவாழ்க்கை.

——(o)——

### 35 - வது அதிகாரம்.

தீபாவளியான மறுநாளே காமேசுவரய்யரிடமிருந்து தான் இராமச்சந்திரய்யரைத் தேடப்புறப்பட்டுவிட்டதாக கடிதம்வந்தது. காமேசுவரய்யர் வடபுறமாகத் தேடப்புறப்பட்டபடியால் அதே திசையில் தானும்போக வேண்டாமென்று சுப்பராமய்யர் தென்புறமாய் புறப்பட்டார். இவர்கள் புறப்படுவதற்குள் காமேசுவரய்யர் வடக்கே வெகுதூரம் போய்விட்டார். லக்ஷ்மியம்மாள் காமேசுவரய்யரைத்தேடப்புறப்பட்டவளாதலால் அவள் தென் புறமிருந்து வடபுறம் புறப்பட்டு வந்தாள். லக்ஷ்மியம்மாள் கூடப்புறப்பட்ட அவள் தம்பி ஓர் படித்தமுட்டாள். இவருக்கு தான் படித்ததை சமயத்துக்குத் தகுந்தபடி உபயோகப்படுத்தத்தெரியாது, இவருடைய பெண்சாதி வெகு அழகாயிருந்தவளை இவர் குருடாகச் செய்துவிட்டார்.

ஒரு காலத்தில் இவர் ஓர் ராஜாவிடத்தில் தண்டனையடைவதாயிருந்தார். பிறகு இவர் பைத்தியமென்று தண்டு விட்டுவிட்டார். எப்படி யென்றால் இவர் ஓர் ராஜாங்கத்திலிருந்த தன்பெண்சாதியை பார்த்து வெகு நாளாகி விட்ட படியால், பார்க்கப் போனார். வழியில் ஓர் கழுதை இறந்து கிடந்தது. சாஸ்திரிகள், அனுதிப்பிரதேசம்ஸகாரம் அசுவமேதபலம் லபேத் என்று சாஸ்திர மிருக்கிறது. இந்த அனாதிப்ரேதத்தை நாம் ஸம்ஸ்காரம் செய்தால் நமக்கு அசுவமேதபலன் கிடைக்குமென்று எண்ணி கழுதையை தோள்மீது எடுத்துப் போட்டுக் கொண்டு தூக்கக் கூடாமல் தூக்கிக்கொண்டு போனார். இப்படி கொஞ்சதூரம் போகவும் பாரம் பொறுக்கக் கூடாமல், ஸர்வஸ்யகாத்ர ஸ்சிரப்ரதானம் என்று சொல்லியிருக்கிறதல்லவா என்று தலையைமட்டும் வெட்டி எடுத்துக்கொண்டு போனார். மறுபடி அதையும் தாங்கக் கூடாமல் ஸர்வேந்திரியாணும் நயனம் ப்ரதான மென்பதை அனுசரித்து கண்களை எடுத்து இடுப்பில் சொருகிக்கொண்டு மாமனார் வீடு போய்ச் சேர்ந்தார். மாமனார் வீடு போனால் முதலில் மாமியாரைப் பார்க்க வேண்டுமென்ற சாஸ்திரத்தை யனுசரித்து மாமியார் வெந்நீர் உள்ளில் நிர்வாணமாய் ஸ்னானம் செய்யும்போது போய், மாமி இப்போது தான் வந்தேனென்றார். மாமியார் அவரை வைது வெளியே துரத்தி விட்டாள். பிறகு கூடத்தில் போனதும் ஓர் தொட்டிலில் குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது. மாப்பிள்ளை அதை சுருக்கென்று கிள்ள அது வீறிட்டழுதது. உடனே மாமியார் ஓடிவந்து என்னவென்று கேட்க மாப்பிள்ளை ஒன்றுமில்லை நான்தான் கிள்ளினேன். பாலானும் ரோதனம் பலமென்று சொல்லி யிருக்கிறது. குழந்தை அழ அழ அதற்கு பலந்தானென்றார். மாமியார் கோபித்துக்கொண்டு பெண்ணினிடம் போய்ச்சொன்னாள்.

பெண் புருஷனுக்கு நல்ல புத்தி சொல்லலாமென்று வந்தாள். சாஸ்திரிகள் பெண்ணைப் பார்த்ததும் பெண் வெகு அழகாயிருக்கக் கண்டு ஓகோ பார்யா

ரூபவதி சத்ரு என்று சொல்லி யிருக்கிறதே இவள் நம்மக்குச்சத்துருவாகக் கிளம்பிடுவாளென்று திடீரென்று அவள் கண்களில் ஒன்றை குத்திவிட்டார். அப்பெண் கூ கூ என்று கத்துவதற்குள் சாஸ்திரிகள் கோகோ மோசம் போனேனே ஏகாக்ஷி லோக சம்ஹாரீ யென்றல்லவா சொல்லி யிருக்கிறது. இவள் லோகத்தையே ஸம்ஹரிப்பவள் நம்மை மிச்சம் விடுவாளாவென்று சொல்லி அவளுடைய மற்றக் கண்ணையும் குத்தி பொட்டை யாக்கி விட்டார். இதைக் கண்ட மாமனார் சாஸ்திரிகளை கொன்று விடுகிறதென்று ஓடிவந்தார். சாஸ்திரிகள் உடனேபயந்துக்கொண்டு வெளியே ஓடிப்போய் விட்டார். ஓடிப்போனவர் அரண்மனை வாசலில் போய் நின்று அங்கே ஒருவரும் காவலில்லாமலிருந்தது கண்டு வெகு சந்தோஷமாய் உள்ளே நுழைந்தார். உள்ளே ஓர் அறையில் ராஜா தன் பெண்சாதியின் வலது துடைமீது தலைவைத்து தூங்கிக் கொண்டிருந்தார். ராணியும் அப்படியே சாய்ந்துகொண்டு தூங்கிக் கொண்டிருந்தாள். சாஸ்திரிகள் பார்த்தார். யதாராஜா ததா ப்ரஜா என்று சொல்லி யிருக்கிற தல்லவா என்று நினைத்து ராணியின் இடது துடையில் தலையை வைத்துக் கொண்டு படுத்துக் கொண்டுவிட்டார். சற்று நேரத்திற்கெல்லாம் ராணி விழித்துக் கொண்டு பார்க்க வேறு புருஷன் தன் மடியில் தலை வைத்து படுத்திருப்பதைக் கண்டு கூ கூ என்று கத்தினாள். ராஜா எழுந்திருப்பதற்குள் சாஸ்திரிகள் வெளியே ஓடிப்போய் விட்டார். பிறகு அவரைக் கூப்பிட்டு விசாரிக்க அவர் ராஜா எப்படியிருக்கிறாரோ அப்படி ப்ரஜையுமிருக்க வேண்டு மல்லவா என்றார். ராஜா அவரைக் கழுதை மீது வைத்து கிராமத்தை பிரதக்ஷிணம் செய்யச் சொன்னான். சாஸ்திரிகள் வெகு சந்தோஷமாய் கழுதைமேல் உட்கார்ந்து உச்ச ஸ்தானேஷு பூஜ்யதே என்று சொல்லிக் கொண்டே போனார். ராஜா கடைசியில் அவரை பைத்திய மென்று கண்டு விடுதலை செய்யச் சொன்னான். இப்படிப் பட்ட பைத்யத்தைக்கூட்டிக் கொண்டு லக்ஷ்மியம்மாள் புறப்பட்டாள்.

சுப்பராமய்யர் புறப்பட்ட வண்டியிலும், லக்ஷ்மியம்மாள் புறப்பட்ட வண்டியிலும் ஜனங்கள் வெகு கூட்டமாயிருந்தார்கள். சுப்பராமய்யர் இதற்காக 2 வது வகுப்பு வண்டியிலேறினார். அதிலும் வெகு கூட்டம் வந்த படியால் அவர் தன் பெண்சாதியையும் கூட்டிக் கொண்டு 3 வது கிளாஸ் வண்டிக்கே போய் விட்டார். கடைசியில் பாதிராத்ரியில் வண்டி ஓர் பாலத்தின் மீது போகும்போது வண்டி ட்ரைவர்கள் குடித்து விட்டு வெகு வேகமாய் வண்டியை விட்டார்கள். இரண்டு வண்டிகளும் முட்டிக் கொள்ள வண்டிகள் அப்படியே கீழே சாய்ந்து விட்டன. எல்லா ஜனங்களும் ஐயோ ஐயோ என்று கத்திக் கொண்டு கீழே விழுந்தார்கள். சிலர் காயம்பட்டார்கள். சிலர் இறந்தார்கள். சிலர் நதியில் இழுத்துக் கொண்டு போகப் பட்டார்கள். இரண்டு வண்டிகளிலும் கடைசி 3 வது கிளாஸ் வண்டிகள் இரண்டு மட்டும் தப்பிக் கொண்டன. அந்த ஜனங்களும் ரொம்பவும் பயந்துகொண்டிருந்தார்கள். மறுநாள்காலையில் இத்தஜனங்க ளெல்லோரும் ஓர் பாசலில் ஏற்றி விடப் பட்டார்கள். அப்போதுதான் லக்ஷ்மியம்மாளும் பாகீரதி யம்மாளும் ஒருவரை யொருவர் கண்டார்கள். பிறகு எல்லா சமாச்சாரத்தையும் விஜாரித்துக் கொண்டெல்லோரும் சேர்ந்து தேடுவதாக தீர்மானித்தார்கள்.

காமேசுவரய்யர் கூடப்போன பரிசாரகனும் சுத்த முட்டாள். அவனை அவன் அண்ணன் தன் பெண்சாதியை கூட்டிவர அனுப்பினான். ஒரு கடிதமும் கையில் கொடுத்தான். ஆனால் போகும்போது தம்பியைப் பார்த்து அடே நீ பைத்தியக்காரன் போனலங்கே நீ 3 வார்த்தைகளுக்கு மேல் பேசாதே என்று சொல்லி யிருந்தான். இவன் அப்படியே ஒப்புக் கொண்டு ஊர் போய்ச் சேர்ந்ததும் அண்ணன் மாமியார் வந்து இப்போதுதானா வந்தாயென்றாள். ஆமென்று சொல்லிஒன்று என மனதில் கணக்கு வைத்துக் கொண்டான். நி மட்டும் தானா என்றாள். ஆமென்று சொல்லி இரண்டு என்று எண்ணிக் கொண்டான். ஊரிலிருந்து தானே என்றாள். ஆமென்று சொல்லி மூன்று என்று கணக்கு வைத்துக் கொண்டு இனி பதில் சொல்லக் கூடாது, அண்ணா கோபித்துக் கொள்வாரென்று தீர்மானித்து நினைத்துக் கொண்டான். பிறகு அண்ணன் மாமியார் அண்ணாசௌக்கியமாஎன்றாள். இவன் பதில் பேசவில்லை. அவள் உடனே திகிலடைந்து "என்ன! என்ன! உடம்பு ஏதாவது அசௌக்கியமா?" என்றாள். இவன் தலையைக்குனிந்துகொண்டு கையிலிருந்த கடிதத்தைப்பார்த்து அழ ஆரம்பித்தான். உடனே மாப்பிள்ளை இறந்து போய்விட்டானென்று எல்லோரும் அழ ஆர

ம்பித்தார்கள். இவன் அவர்களைப் பார்த்து தேம்பித் தேம்பி அழுதான். இதற்குள் ஊர் முழுவதும் கூடிவிட்டது. எல்லோரும் அழுதார்கள். கடைசியில் ஒருவன் இவனென்ன கடிதத்தை வைத்துக்கொண்டே அழுகிறானே யென்று கடிதத்தை வாங்கி வாசித்துப் பார்த்தான். அதில் அண்ணன் சௌக்கிய மாயிருக்கிறதாக எழுதி யிருந்தது. உடனே அவன் எல்லோருடைய அழுகையையும் நிறுத்தி வந்த தம்பியைப் பார்த்து எண்டாபையா நீ அழுகிறாயென்றான். அவன் தேம்பித் தேம்பி அழுதுகொண்டே எங்களண்ணா எழுத்து வெகு காலத்திற்கு முன் கொட்டை கொட்டையாக யிருந்ததே இப்போது அதுகளுக்கு என்ன வியாதியோஎல்லாம் இளைத்துப் போய்விட்டதே நான் என்ன செய்வேனென்று மறுபடியும் அழுதான். பிறகு அவனை சமாதானப் படுத்தி அண்ணா சௌக்கியமா என்றான். அவன் மூணு வார்த்தைக்கு மேல்தான் நான் பேசக்கூடாதே நான் எப்படி பதில் சொல்வே னென்றான். பிறகு அவனை சாவகாசமாய் விஜாரித்து சமாசாரங்களைத் தெரிந்து கொண்டு எல்லோரும் சிரித்துவிட்டு பைத்தியக்காரா நீ ஊருககுப் போ என்று அனுப்பிவிட்டார்கள். இதை யெல்லாம் கேட்ட அண்ணான் நீ என்னிடம் இருக்கவேண்டாம் போஎன்று அவனைத் தள்ளிவிட்டான். இப்படிப்பட்ட புத்திசாலியை காமேசுவரய்யர் கூட கூட்டிப்போனார்.

(இன்னும்வரும்.)

எஸ். ராமஸ்வாமிஐயர்.



## SHORT STORY.
## "That is the Law."
### ததேவ தர்மம்.
ஒரு சிறு கதை.

"அரசன் அன்று கொல்லும் தெய்வம் நின்றுகொல்லும்" என்பது உண்மையான வோர் பழமொழி. "நான் மனிதரில் ராஜாவாய் இருக்கிறேன்" என்று பகவான் சொல்லியிருக்கிறானபடியால், இராஜதர்மம் நழுவாதிருக்க துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனம் செய்வதே ராஜநீதியாம். அப்படிச் செய்பத்தவறின் ராஜதர்மம் கெட்டுப்போம். "குடியுயரக் கோலுயரு"மென்பது எவ்வளவு உண்மையோ, அப்படியே "கோல்தாழக் குடிதாழும்." இதற்கு ஆதாரம்: "யதாராஜா ததாப்பிரஜா" என்னும்ஆப்த வாக்கியமே.

ஒரு ஊரில் ஒரு குடித்தனக்காரன் சர்க்கார் உத்தியோகஸ்தன் ஒருவனிடம் வியவகாரார்த்தமாய்ச்சென்றான். உத்தியோகஸ்தன் அநீதியாய் அவனது உரிமையையும் உடைமையையும் அபகரித்துக்கொண்டு அவனைச் சந்தியில் விட்டுவிட்டான். ஏழைக்குடியானவன் என்ன செய்வான்! அவனுக்குக் கோர்ட்டுக்கும் கச்சேரிக்குமாக அலைந்துகொண்டிருக்க அவகாசமில்லை. அவனுழைத்தால்தான் பூமிவிளையும். அவனுழைக்காமல் கோர்ட்டும் கச்சேரியுமாக நின்று அநியாயம்செய்த உத்தியோகஸ்தன் அக்கிரமத்தை யடக்க வேண்டுமென்று முயற்சித்துக் கொண்டிருந்தால், தானும் தன் குடித்தனமும் அழிவதோடு பூமியும் விளைவு குன்றிப்போம். ஆகையால் அந்தக் குடியானவன் தர்மநீதி யறிந்த மந்திரியிடம் போய் முறையிட்டான். அந்த மந்திரி நடந்ததை விசாரித்து ஏழைக் குடியென்று உத்தியோகஸ்தன் அவனை ஏமாற்றி விட்டதாக அறிந்துகொண்டு, அதை யவனிடம் சொன்னால் அவன் மனங்குன்றி சோர்ந்து போவானென்றெண்ணி, சட்டப்படி அவனைக் கண்டனை தண்டனை செய்

வதற்கு வேண்டிய லாயக்கு அவனிடமில்லை யென்பதை யுணர்ந்து, அவனுக்கு மனந்தேற ஒரு சிறிய உபாக்கியானம் செய்தார். குடியானவன் குறையிரந்து "சாமி! இது தர்மமா? அடுக்குமா?" என்று கேட்டு நிற்க, பின் வருமாறு அவனுக்கு பதில் சொன்னார்.—

"அப்பா நீ தர்ம விசாரம் செய்கிறவனாயிருக்கிறாயே, எனக்கு நேர்ந்த ஒரு சம்பவத்தைச் சொல்கிறேன் கேள். நான் இன்றுகாலையில் உலாவச்சென்றேன். காலைவேளையில் எல்லாம் கண்ணுக்கு ரமணீயமாயிருந்தது. வசந்தகால மாதலால் மரஞ் செடிகளும் புஷ்பித்து பிரசந்நமாய் விளங்கின. எல்லாவற்றையுங் கண்டு மனங்களித்துச் சந்தோஷப் பட்டுக்கொண் டிருக்கையில், தலைக்குமேல் ஆகாசத்தில் திடீரென்று "கீச்சு" "கீச்சு" என்று ஒரு சத்தம் கேட்டது. அதைக்கேட்டு உடனே தலை நிமிர்ந்து பார்த்தேன். ஒரு காக்காய் தன் மூக்கில் ஒரு சிறிய அணிற்குஞ்சைக் கௌவிக்கொண்டு போனதைக் கண்டேன். எனக்கானால் மனம் பொறுக்க வில்லை. வயிறு குபீரென்று பத்திக்கொண்டது. நான் என்ன செய்கிறதென்று யோசிக்குமுன் காக்காய் கண்ணுக்குத்தெரியாமல் பறந்தோடிவிட்டது. இது தர்மமா? என்று சிந்தித்தேன். சிந்தையிலே சிந்திக்கச் சிந்தையோய்ந்து உட்கார்ந்தேன். 'துஷ்டருக்குச் சிஷ்டரை வதைப்பதுதான் தர்மம்' என்று அசரீரி வாக்கொன்று பிறந்தது. துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனம் செய்வது எங்கே? யென்று அந்த அசரீரியைக் கேட்டேன்.—'தர்மம் நசித்து அதர்மம் தலையெடுக்கும் பொழுதெல்லாம் நான் அவதாரமாகி தர்மத்தை நிலைநிறுத்துகிறேன்' என்று பகவான் கொடுத்த அபயவாக்கு வீண்போமா?' என்று மறுபடியும் அசரீரிவாக்குப்பிறந்தது. பகவான் எங்கே? யென்றேன். "எங்கே!" யென்னும் சத்தம் பிறந்த விடத்திலேயே இருக்கிறார்—என்று மறுபடியும் அசரீரிவாக்குப்பிறந்தது. கண்விழித்துப் பார்த்தேன். வழியோடு போன ஒரு பரதேசி "எளியாரை வலியாரடித்தால், வலியாரைத் தெய்வமடிக்கும்" என்று சொல்லிக்கொண்டே போனார். 'ஆ! அப்படியா!' வென்று அதிசயப்பட்டுக்கொண்டு போனேன். அரைமைல்தூரம் போகுமுன் ஒரு தோப்பில் காக்காய் பிடிக்கிற குறவன் அநேக காக்கைகளைப் பிடித்துக் கொன்று அவைகளை யெல்லாம் தின்னும்படி தன் குடும்பையில் போட்டுத் தூக்கிக்கொண்டு போனான். ஆகாசத்தில் ஆயிரம் காக்கைகள் கத்திக் கதறிக் கொண்டு பரிதாபமாய்ப் பறந்தன.

"எளியாரை வலியாரடித்தால் வலியாரைத் தெய்வமடிக்கு" மென்பது ஸத்தியந்தான்: என்று நம்பி வீடுவந்து சேர்ந்தேன். "கெடுவான் கேடு நினைப்பான்" என்றிருப்பதாலே "ததேவ தர்மம்" என்று மந்திரி குடியானவனுக்குச் சொன்னார்.

குடியானவனும் அவர் சொன்னதைக்கேட்டு கர்மத்தை வெல்ல யாரால் முடியும்! விதை விதைத்தவன் விளைந்தபின் அறுக்கிறான். நாம் செய்த பாபம் நம்மை இந்த அக்கிரமஸ்தன் கையில் அகப்பட்டுக்கொள்ளச் செய்தது! என்று சொல்லிவிட்டு, சந்தோஷ முகத்தோடு தன் பயிர்த்தொழில் வேலை செய்யப்போனான். குடியானவன் கழனியில் உழைத்த உழைப்பில் தன் கஷ்ட நஷ்டங்களை மறந்து ஆநந்தநித்திரையனுபவித்தான். அக்கிரமம் செய்த உத்தியோகஸ்தனோ 'எங்கே நம் குட்டு வெளியாய் விடுமோ!' என்று ஏங்கி, பொய்மேல் பொய்யாகப் பொய்க்கோட்டை கட்டிக்கொண்டு தூக்கமின்றிப் புரண்டுருண்டுகொண்டு கிடந்து, விடியற்காலையில் மூளை அயர்ந்துபோய் மலைப்பாம்பு போல் பிரஜ்ஞையற்றுக் கிடந்தான்.

தூக்கத்தின் சுகத்தை யவனறிந்தவனல்ல. "ததேவ தர்மம்" என்பது உண்மையல்லவா?

C. V. S.

——:-:——

## Moral Education.

*The Madras Mail 27th April, 1911.*

SIR,—Mr. John Jardine's questions in Parliment has again brought to the surface the question of moral education which has been occupying the attention of the authorities and the public off and on for the past quarter of a century. Recent events have brought the question of moral education of the young to the front and given it an importance above all other things. I have fully dealt with the question in an article which appears in the March number of the *Malabar Quarterly Review*. It was written in response to a repuest from Dewan Bahadur P. Rajaratna Moodelliar, C. I. E., the local Secretary of the National Indian Association, for suggestion in connection with the moral education of the young. If you turn over the files of the *Madras Mail* for the last quarter of 1903 you will find a letter therein. The subject of the letter is "Religious Education in Schools and Colleges." I affixed it as a preface to my article on "Religion and Ethics," the reprint of which I contributed to the *Madras Review*.

The subject is one of absorbing interest and cannot be dealt with off hand. I have attempted to review the question in the light of my ten years' experience of actual work donein the field.In this material age men are slow to recognise that any work has been done, or can be done, which has not produced any tangible result. Tangible evidence is what the age is hankering after; and it is having plenty of that evidence for the neglect of the moral side of education long, long ago. We sow as we reap, but, unfortunately, the sowers forget that they are sowing and the reapers forget that they are reaping. Whatever amount of unending discussions and differences of opinion the question of moral education may produce, in the long run, you may rest assured, there is but one solution to it, and one only. That, in brief, is to cultivate the religious instinct in man. You cannot kill the moral feeling in young minds and expect them to grow into morally responsible beings as years pass on and the body grows to manhood.

I have had opportunities of making a "character-study" of typical individuals belonging to the various learned professions, and with a view to test the boasted improvement of morals among educated men I have taken them at the worth which is openly assigned to them. And with what result? Alas! it would be an unpleasant task for me to discuss. But leaving the individual aspects of the case apart, the general principle of the question confronts you at every turn. You cannot neglect the moral feeling of the child and the youth and expect to find any moral character in the grownup individual. "The persistent attempt to cheat nature, who will not be cheated, is the besetting sin of the times, and one can see evidence of it everywhere—in the temples, in tramcars, in cutcherries, schools, bazaars, and everywhere, perhaps. wherein human relations are brought into active play." This is a statement which I made just one year ago, and the years experience of human conduct goes to confirm, rather than modify, the truth of the statement.

"The letter of the law which killeth," is everywhere sought to be worshipped to the detriment of the "spirit which quickens," and inspires one with moral force. Pascal says that of all the faculties of mind, that which, standing among a number of facts, sees only what it wishes of chooses to see is fraught with the must dangerous consequenec to the character of the indvidual. "Indeed, the practice of shutting one's eyes to inconvemient or undesirable facts and pretending to know and see what is alone wanted to establish one's aggressive influence has spread throughout the land like a moral contagion, trampling the tender religious instinct in man under the rough-shod feet of rampant materialism. with its debasing influence covered under the innocent looking cloak of secular education." That is a serious verdict to bring against any State or society;and while fully realsing the serious nature of the verdict, I do not think that any good will come by shutting one's eyes to the truth contained therein, however unpleasant it may be to recognise it. The unpleasant has to be faced and tackled, and not shirked. Will a serious attempt be made to face the upleasant facts or the query which suggests itself to one who for ten years has been silently but diligently working in the field ?

C. V. SWAMINATHA IYER.

*The Madras Mail—of 2nd May, 1911.*

SIR,—Permit me the opportunity, of thanking Mr. Swaminatha Iyer for his frank, outspoken letter in your issue of the 27th April. The duty of the Educational authorities is plaintly to inculcate right in place of wrong habits of mind. The habit of reverence should be made to replace the present habit of growing irreverence. The habit of hasty superficial judgment should be replaced by the habit of the "open mind." Pupils should be taught to acquire the habit searching below the surface of all formulated truths, to penetrate to what we may perhaps describe as the very soul of truth. The rising generation of Hindus are quickly acquiring what I may term as superficial habits of mind, and it is the duty of our Educational authorities to stem the rising tid. Of what real practical benefit will be the most perfect curriculum that ever was, or can be devised, if the habits of mind of the scholars are not properly trained. But the Educational authorities act as if they were not responsible for more than the curriculum. This is an awful, a terribe, mistake, and we shall see the sad results hereafter. The authorities are not asked to meddle with a pupils religion, but only to inculcate right habits of mind, without which only lawless, dangerous characters must be the outcome of our schools. As the result of our Western education the Hindus are losing all the "depth" of the Eastern mind, which is replaced by the superficiality of the hasty Western mind.

A MAN.

---

PRINTED AT THE SOUTH INDIAN PRESS 18- LINGHI CHETTY ST., G. T. MADRAS.